# காமம் சான்ற ஞானப் பனுவல்





ந.ரா. முருகவேள், M.A., M.O.L.

ஓம்

# காமம் சான்ற ஞானப் பனுவல்

(மணிவாசகர் மணிமலர்)

இயற்றியவர் :

**திரு. ந.ரா. முருகவேள், M.A., M.O.L.,**

ஆசிரியர் : திருக்கோயில்

தொகுத்த மாணவர் : “கலைமாமணி”

**கவிஞர் திரு. மனசை. ப. கீரன், B.A., B.T.**




வெளியிடுபவர் :

**இராமலிங்கர் பதிப்பகம்,**

17, அப்துல் ரசாக் தோட்டத் தெரு,

சைதாப்பேட்டை, சென்னை - 15.

**இந்நூல் கிடைக்கும் இடங்கள் :**

1. தருமை ஆதீன சமயப் பிரசார நிலையம்,
158, உஸ்மான் சாலை,
தியாகராய நகர், சென்னை-17.

2. தெய்வீக சித்தாந்த இலக்கிய மன்றம்,
89, வரதா முத்தியப்பன் தெரு, சென்னை-1.

3. சேக்கிழார் பதிப்பகம்,
8-ஏ, சந்நிதி வீதி,
குன்றத்தூர், சென்னை-69.

4. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
89, பிரகாசம் சாலை, சென்னை-108.

5. சைவ சித்தாந்தப் பெருமன்றம்,
4, வேங்கடேச அக்கிரகாரம்,
மயிலாப்பூர், சென்னை-4.

6. அருட்டிரு குருபழநி ஆதீனம்,
திருக்குறள் பீடம் - குருகுலம்,
மதுராந்தகம்-603306.

**விலை ரூ. 7-00**

---

நவஜோதி அச்சகம்,
2, ஔலியா சாகிப் முதல் தெரு,
எல்லீஸ் ரோடு, சென்னை-2.

27-5

## பொருள் அடக்கம்





ஓம்

# படைப்புரை

நந்தி புரத்தில் எமைப்பயந்து,
நலக்க வளர்த்தே, அறிஞர்அவை
முந்த வைத்துச், சிவம்தமிழின்
முதன்மை தேற்றி உய்யவைத்த,
எந்தை! சைவப் பெருஞ்சான்றோர்!
**இராம சாமி முதலியார்க்கு,**
அந்தம் இலாச்சீர்ச் **சிவகாமி**
**அன்னை யார்க்கு,**இஃது என்படைப்பாம்!

— **ந. ரா. முருகவேள்**

# AUTHOR'S PREFACE

This book contains four of my lectures. The first lecture was delivered at 'Pookkadai Chennamallikeswarar' Temple, Madras, under the very respectable and eminent presidentship of 'Saivap Periar' Thiru S. Satchidhanandam Pillai, of hallowed memory, 32 years ago (27-12-1952).

The second and the third lectures were delivered, as Endowment lectures, in honour of "Kalaith Thanthai" Thiru. Karu. Muthu Thyagaraja Chettiar, at the Thyagarajar College of Madurai, under the auspices of the Madurai Kamaraj University.

The script of the fourth was prepared for and presented to a seminar arranged by the Department of Tamil at Sri Venkateswara University, Thirupathi. All the four lectures dwell upon the greatness of Saint Manikka vasagar and his sacred works, Thiruvasagam and Thirukkovaiyar.

One of my many beloved and best students, most devoted and talented, is 'Kalai Mamani' Kavignar Thiru. **Manasai. Pa. Keeran**, B.A.,B.T. He studied under me, a quarter of a century before, during the years 1958-1961, at the Madras Christian College, Tambaram. He is at present an officer in the All India Radio, Madras. He has been devoutly assisting me, in my literary endeavours, for the past several years. He it was who prepared the complete and clean manuscripts of my books: *தருக்க இயல் விளக்கம் (1960)*, *இலக்கணத்தில் எழுந்த கற்பனைகள் (1961)* *கவிதை அஞ்சலி (1968)*, etc.

Now he has suggested, sponsored and compiled these four essays for publication by Ramalingar Pathippagam. As a representative, and on behalf, of student-admirers, he presents me this compilation, as a token of great affection, gratitude and respect.

Thiru. 'Kalai Mamani' Kavignar-Keeran is rather a rare phenomenon. He was and still remains an exemplary, typical student. He won the Sethupathi Gold Medal of the Madras University, for general proficiency in all subjects, in the B. A. class. He was very popular and influential with students. He was a favourite of professsors too! Nowadays, we cannot meet such a deeply devoted and sincerely loyal students. It is my good fortune to have got such benevolent and brilliant students. I deeply appreciate the 'guru-bhakthi' of Thiru Keeran and others. I heartily bless all of them, wishing them all the best of luck and life.

I wish godspeed to Ramalingar Pathippagam, for having spontaneously come forward, to undertake the Publication of this small but precious book.

I am thankful to Professor P. Thirugnana Sambandam Pillai, M.A., L.T. (Director, Institute of Traditional Cultures, University of Madras and President, Saiva Siddhanthap Peru Mandram, Mylapore), for releasing this book at a function, held at Dharmapura Adheena Samaya Prachara Nilaiyam, Thyagarayanagar.

1-8-1984 N. R. MURUGAVELL
MADRAS

ஓம்

# மாணவர்களின் அன்பு மலர்!

அரும்பெருஞ்சீர் எங்கள்பே ராசிரியர்
முருகவேள் அவர்கள் அன்பும்;
பெருந்தகைமைப் பண்புகளும்; பிறங்குபுல
மைத்திறனும்; பெரிதும் போற்றி
விரும்பும்வகை, கற்பிக்கும் வித்தகமும்;
பிறவும்எல்லாம் மேன்மை சான்ற!
நெருங்கும்அவர் மாணவர்குழாம் அன்புமலர்
இஃது,அவர்க்கு நேர்கின் றேமே!

— மாணவர் குழாம் சார்பில்,
மனசை. ப. கீரன்



('எங்கள் ஆசிரியர் !'
தொடர்ச்சி)

திருக்குறள்பீடம் அழகரடிகள் (1977) — 'சித்தாந்த ஞானாகரர்' யாழ்ப்பாணம் நல்லையாதீனம் (1977) — 'திருவாசகச் செல்வர்' தமிழ்நாடு ஓதுவார்கள் சங்கம் (1979) — 'சித்தாந்த வித்தகர்' சென்னைத் தமிழ் வளர்ச்சிமன்றம் (1983) — 'தமிழ்ச்சான்றோர்' தமிழகப் புலவர் குழு வெள்ளி விழா (1983) — 'சித்தாந்த கலாநிதி' தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபையின் நூற்றாண்டு விழா (1984).

இவர் இலங்கைக்குப் பலமுறை சென்றவர்; பல விழாக்களுக்குத் தலைமை தாங்கியவர். திருக்கேதீசுவரம் சைவசித்தாந்த மாநாடு (1960), கொழும்பு விவேகானந்த சபை நூற்றாண்டு விழா (1962), யாழ்ப்பாணம் அகில இலங்கைச் சேக்கிழார் மன்ற விழா (1968), கொழும்பு விவேகானந்த சபை ஆறுமுகநாவலர் நூற்றாண்டு விழா (1979), ஈழத்துத் திருநெறி மன்ற விழா (1980), இலங்கை அனைத்துலக இந்துமத மாநாடு (1982) ஆகியவற்றில் சிறப்பாகக் கலந்துகொண்டுள்ளார்.

(இன்னிசை வெண்பா)

'விரிப்பிற் பெருகும், தொகுப்பின்எஞ்சும்' என்னும்
உரைக்கிணங்க, ஏதோ ஒருசில சொற்கள்தாம்,
ஈங்குரைத்தேன்; எங்கள்பே ராசிரியர் சீர்த்திஎல்லாம்,
ஆய்ந்தளருந்து கூறல் அரிது!

—'கலைமாமணி' கவிஞர் மனசை ப. கீரன்



ஓம்

# காமம் சான்ற ஞானப்பனுவல்

**முன்னுரை :**

திருவாசகம் போலவே, திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் நூலும், மாணிக்கவாசகராற் செய்யப் பெற்றதாகும் என்பதனைப் பெரும்பாலோர் அறியார். இவை இரண்டும் முறையே சிவம், தமிழ் என்பனவற்றிற் குரிய சிறப்பு நூல்களாய், வாதவூரடிகளின் அன்பு நலனையும், அறிவுத்திறனையும் விளக்கும் மாட்சிமை மிக்கு வயங்குகின்றன. திருச்சிற்றம்பலக் கோவையாரின் அளப்பருஞ் சிறப்பினையெல்லாம், விளக்கமுறச் சுருங்கிய முறையிற் குறிப்பிடும் 'காமஞ்சான்ற ஞானப்பனுவல்' என்னும் அரும்பொருட் சொற்றொடர், குமரகுருபர அடிகள் அருளிச் செய்த சிதம்பர மும்மணிக்கோவையில்,

**''கடங்கலுழ் கலுழிக் களிநல் யானை<br>மடங்கலங் துப்பின் மானவேல் வழுதிக்கு<br>இருநிலம் அகழ்ந்தும் எண்ணில்பல் காலம்<br>ஒருவன் காணாது ஒளித்திருந் தோயை<br>வனசப் புத்தேள் மணிநாப் பந்திக்<br>கவனவாம் புரவியிற் காட்டிக் கொடுத்துப்<br>பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்,<br>ஐந்திணை யுறுப்பின் நாற்பொருள் பயக்கும்<br>காமம் சான்ற ஞானப் பனுவற்குப்<br>பொருள்எனச் சுட்டிய ஒருபெருஞ் செல்வ!''**

எனவரும் பாடற்கண் வருவதாகும். அதன்கண் குமர குருபரர், மாணிக்கவாசகர், தாம் அருளிச் செய்த திரு வாசகம், திருச்சிற்றம்பலக்கோவையார் என்னும் இரு பெரு நூற்கும் உண்மைப் பொருளாவார் அம்பல வாணரே எனச் சுட்டிச் சென்றமையினையும், பாண்டிய வேந்தனுக்கு மாலும் அயனுமே காணமாட்டாத இறைவனை, வேதப் புரவியின்மேல் வாதுவனாகப் போதரக்காட்டி,அவனை உய்வித்த சிறப்பினையும் புகழ்ந் தெடுத்துப் பாராட்டி, மாணிக்கவாசகரைச் 'செந்நாப் புலவன்' எனச் சிறப்பித்தும், திருவாசகத்தினைப் 'பைந்தமிழ்' எனப் போற்றியும், திருச்சிற்றம்பலச்கோவை யாரை 'ஐந்திணையுறுப்பின் நாற்பொருள்பயக்கும் காமம சான்ற ஞானப் பனுவல்' என விதந்து கூறியும் மகிழ்ந்தின்புறுகின்றார்.

**தொடர் அமைப்பின் சிறப்பு :**

திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் நூலானது ''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும், பாடல்சான்ற புலநெறிவழக்கம்'' தழீஇக், குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை என்னும் ஐந்திணைக்கும் உரிய முதல் கரு உரிப்பொருள்கள் யாவும்அமையஇயற்றப்பட்டதாகலான் **'ஐந்திணை யுறுப்பின்'** என்றும்; தன்னை ஓதுவார்க்கு இன்பம் தலைக்கீடாக அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் ஒருசேரப் பயப்பித்தலின் **'நாற் பொருள் பயக்கும்'** என்றும்; எத்திறத்தானும் உய்திநெறி தலைப்படாத கடையாய மக்களையும் கடைத்தேற்றிப் 'பேதையைக் காதல் காட்டிக் கைவிடுக்க' என்னும் முறை பற்றிப், பல பிறப்பிடையும் ஆணும் பெண்ணுமாய்ப் பயின்று போகந்துய்த்துப் போந்த, அவர்தமக்குத் தூலாருந்ததி நியாயமாக, அவர்கள் தாழப்பெறும்இணை விழைச்சினுள்ளே மிக்கதொன்று காட்டிக் 'கடுத்தின்னா தானைக் கட்டிபூசிக் கடுத்தீற்றியவாறு போல' உய்திநெறி எய்துவித்தற் பொருட்டு, ஒப்புயர்வற்ற காதற்றலை

மக்கள் இருவர்மேல் வைத்து, அவர்தம் காதலின்ப அன்பு வாழ்க்கையின் வளர்ச்சித் திறனைப், பலபடியாகத் தொடர் கதை போல் அமைத்துக் காமச்சுவை கனிய இயற்றப் பெற்றுண்மை கருதிக் **'காமம் சான்ற'** என்றும்;

அங்ஙனம் காமம் சான்ற இயல்பினது போல மேனோக்காகக் காண்போர்க்குத் தோன்றினும், அதனை ஊடுருவிக் காணவல்ல நுண்மாண் நுழைபுலம் மிக்க அறிவு மதுகைவாய்க்கப் பெற்றோர்க்குக், குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்னும் ஐந்திணைகளும், முறையே சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் (நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப் படக்கம்) என்னும் ஐம்பாடுகள் எய்தும் உயிர்நிலை களைக் குறிக்கும எனவும்; சிவனும் உயிரும் முறையே தலைவியும் தலைவனுமாம் எனவும்; பாங்கன் பாங்கி செவிலி நற்றாய் என்போர், முறையே திருவருளும் உயிரறிவும் மறைப்பாற்றலும் இறைவியுமாம் எனவும்; இனிதுணர்ந்து கொள்ளுதற்கு ஏற்ப, இயைந்து விளங்கும் நலங் குறித்து **'ஞானப்பனுவல்'** என்றும்; குமரகுருபர அடிகள் இதனை அழகுறப் பாராட்டி மகிழ்ந்தனர்!

### அறிவன்நூற் பொருளும், உலகநூல் வழக்கும் :

இந்நூல் தூய காமச் சுவையோடு மிக மேலாய ஞானப் பொருளும் பொதிந்துள்ளமையினை,

**''தில்லை மூதூர்ப் பொதுவினில் தோன்றி**
**எல்லையில் ஆனந்த நடம்புரி கின்ற**
**பரம காரணன் திருவரு ளதனால்,**
**திருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர்**
**ஐம்பொறி கைஇகந்து அறிவாய் அறியாச்**
**செம்புலச் செல்வ ராயினர் ஆதலின்;**
**அறிவன்நூற் பொருளும், உலகநூல் வழக்கும்என,**
**இருபொருளும் நுதலி எடுத்துக் கொண்டனர்;**
**ஆங்கவ் விரண்டனுள்,**

**ஆகமநூல் வழியின் நுதலிய ஞான**
**யோகநுண் பொருளினை யுணர்த்துதல் அரிது''**

எனவரும் போராசிரியர் உரைப்பாயிரம்தானும் வலி யுறுததும். 'திருக்கோவையாருண்மை' என்னும்பெயரால் வழங்கும் அரும்பெறல் நூல், இதன் ஞானப்பொருளினை நன்கினிது விரித்து விளக்குவதாகும்.

**புதுமையும் புரட்சியும் :**

தமிழிலக்கியங்களின் வரிசையிலும் வரலாற்றிலும், திருவாசகம் திருக்கோவையார் என்னும் இரண்டும், ஒரு பெருஞ் சிறப்பு முதலிடம் பெறுவனவாகும். இவ்விரண் டும் சங்க நூல்களுக்கும், பிற்கால இலக்கியங்களுக்கும் இடையே, ஓர் எல்லைக்கல் போல விளங்கும் இயல்பின. பிற்காலக் கவிதைகள் பலவும் தோன்றுவதற்கு வழி வகுத்துக் காட்டிய கழிபெருஞ் சிறப்பினவாய், முற்காலச் சங்கத்தொகை நூல்களினின்றும் ஓரளவு வேறுபட்ட பொருளும் போக்கும் நடையும் அமைப்பும் உடையன வாய், இவ்விரண்டும் இலங்குகின்றன. தொல்காப்பி யனார் கூறாத கட்டளைக் கலித்துறை, பலவகை விருத் தங்கள் என்னும் புதிய பாவினங்களை, முதன்முதற் பெருக வழங்கப் பாடியருளியவர் மாணிக்கவாசகரே யாவர். பிற்காலத்தெழுந்த கோவை நூல்கள் எல்லாம், கட்டளைக்கலித்துறைகளாலேயே அமையநேர்ந்தமைக்குக் காரணம், திருக்கோவையாரின் அமைப்பேயாம், சிந்தா மணி, பெரியபுராணம், கம்பராமாயணம் முதல்ய நூல் களும், பிறவுமெல்லாம் பெரிதும் விருத்தப்பாக்களாலேயே இயற்றப்படுதற்குத் திருவாசகமே வழிகோலிக் கொடுத்தது எனலாம். எனவே, மாணிக்கவாசகர் மொழி இலக்கியம் கவிதை முதலிய துறைகளில் ஒருவகைப் புதுமையையும், புரட்சியையும் விளைவித்த சான்றோராதல் தெளியப் படும்.

அதுமட்டுமோ! சங்ககாலப் புலவர்கள் இயற்கைச் காட்சியழகுகளைக் கலையுணர்வுக்கண் மட்டுமே

கொண்டு கண்டு மகிழ்ந்து, நம்மனோர்க்கு அவற்றைத் தம் கவிதைகளில், அழியா ஓவியமாக அழகுறத் தீட்டிக் காட்டினர். மற்று, நம் மாணிக்கவாசகரோ, வெறும் கலையுணர்வோடு மட்டுமன்றி, இறையருளுணர்வுக் கண்கொண்டு அவற்றைக் கண்டு, நம்மனோர்க்கு அவ் விறையருளுணர்வைத் தோற்றுவிக்கத், தம் இயைருளின்ப அனுபவ நலங்களைக் கவிதை மழையாய்ப் பொழிந்தார். சங்ககாலப் புலவர்கள் இவ்வுலகியற் காட்சி நிகழ்ச்சிகளை யும், இவ்வுலகின்கண் வாழும் மாந்தர்தம் உள்ளத்து உணர்ச்சிகளையுமே குறித்துப் பாடிச் சென்றனர். ஆயின், மாணிக்கவாசகரோ, இவ்வெல்லாவற்றிற்கும் அடிப்படைப் பெருங்காரணமாக இலங்கும் இறைவனின் திருவருட்டிறத்தினைக் குறித்துப் பலபடியாக விரித்துப் பாடி விளக்கியுள்ளனர்.

நமக்குத் தெரிந்தவரையில், முதன்முதல் தமது இறைய ருளின்ப அனுபவ நலத்தின் பெற்றியினைத், தாம் நுகர்ந்த வாறே தம் திருவாய்மலர்ந்து, கவிதைகளாகப் பாடி விளக்கிய சான்றோர், மாணிக்கவாசகரே எனலாம். தொல்காப்பியர் திருவள்ளுவர் நக்கீரரை யுள்ளிட்ட சான்றோர்கள் எவரும், இறையருளின்ப அனுபவம் குறித்துத் தம்மாட்டு நிகழ்ந்த அனுபவச் செய்திகளாக வைத்து, ஏதும் பாடிற்றிலாமை ஈண்டுக் கருதி யுணரற் பாலது. எனவே, இத்துறையிலும் ஒரு புதுநெறியை வகுத்தமைத்து வளர்த்தவர், மாணிக்கவாசகரேயாதல் தேற்றம். சங்ககாலச் 'செந்தமிழ்' மொழியினைத் **'தெய்வச் செந்தமிழ்'** மொழியாகவும் மிக்குயர்த்து மிளிரு மாறு, முதன்முதற் செய்த சிறப்பு, மாணிக்கவாசகர்க்கே உரியது. இவ்வாற்றால், மாணிக்கவாசகர் சங்க காலத்தை அடுத்துத் தோன்றி, முதன்முதலாக ஒரு பெரும் புதுமையினையும் புரட்சியினையும், தமிழகத்தில் நிகழ் வித்தவர் என்பது உணர்ந்துகொள்க!

**காதலுணர்ச்சியும், கடவுளுணர்ச்சியும் :**

மாணிக்கவாசகர் நிகழ்த்திய பல அரும்பெரும் நற்செயல்களுள், ஒன்றை ஈண்டுக் குறிப்பிடுதல் பொருத்தமாகும். சங்ககாலத்தை அடுத்துத் தோன்றிய மாணிக்கவாசகர், தம் காலத்தில் சங்ககாலத் தமிழர் நாகரிக வாழ்க்கை, சிறிது சிறிதாகத் தேய்ந்து மங்கி மறையத் தொடங்கியமை கண்டு, அதற்கு உறுபெருங் காரணம் யாதென ஆராய்ந்து, சங்ககாலத் தூய விழுமிய காதலொழுக்கம், பின்னர் நாளடைவில் தூய்மை இழந்து இழிதகவுற்றுப், 'பொய்யும் வழுவும்' மிக்குச் சீர்கேடுற் றொழிந்தமையே, அதற்குக் காரணமென உணர்ந்து, மீண்டும் பழந்தமிழ்ச் சான்றோர்களின் நாகரிக வாழக்கைப் பண்பாட்டினை வளர்த்து நிறுவுதலே, தம் கடமை எனத் தேர்ந்து, அங்ஙனம் செய்தல் வேண்டிப், பழைய சங்கச் சான்றோர் பாராட்டிய தூய விழுமிய காதலுணர்ச்சியோடு, கடவுளுணர்ச்சியினையும் இணைத்துப் பிணைத்துத் 'திருச்சிற்றம்பலக்கோவையார்' என்னும் இந்நூலைச் செய்தருளினர்!

எத்துணைதான் தூய விழுமிய காதலொழுக்கமாயினும், கடவுளுணர்ச்சியோடு கூடாதாயின், அது நாளடைவில் மக்களிடையே படிப்படியாக இழிந்து, ஒரு நாடும் மொழியும் மக்களும் நாகரிகமும் அழிந்தொழிவதற்குக் காரணமாதல் ஒருதலை. மிகப் பழைய கிரேக்க, உரோம நாடுகளின் நாகரிகங்களெல்லாம், அடியோடு மாய்ந்து மறைந்து 'மருங்கறக்கெட்டு' அழிந்தொழிந்தமை, அம் மக்கள் வளம்நிறைந்த செல்வச் செழிப்பிலும், வரம் பிகந்த காமக்களியாட்டிலும் மயங்கிக் கடவுளுணர்ச்சியினை மறந்ததன் விளைவேயாம் என்பர் வரலாற்று அறிஞர்கள். ஆதலின், அவ்வரும் பேருண்மையினை ஆய்ந்துணர்ந்து, அக்குறைபாட்டினைப் போக்கி நிறைவு செய்தல் குறித்துத், தம் மதிஇலச்சினையாகத் திருக்கோவையாரினை யாத்தருளிய, மணிவாசகர் செய்த பிறிதொரு செயலும் ஈண்டறிந்து மகிழற்பாலது!

**'கோவை' என்னும் பெயர்க் காரணம் :**

சங்ககாலப் புலவர் பெருமக்கள், விடுபூக்களைப் போலத் தனித் தனியாக ஒரொரு துறைபற்றியே, அகத் திணைப் பாடல்கள் பாடிச் சென்றனர். தொல்காப்பிய ரும் தலைவன்கூற்று, தலைவிகூற்று, பாங்கன்கூற்று, பாங்கிகூற்று என்றிங்ஙனம் அவரவர் கூறறு நிகழ்தற் குரிய இடங்களையும் பிறவற்றையும் கூறினரேயன்றி, இயற்கைப்புணர்ச்சி- இடந்தலைப்பாடு- பாங்கற்கூட்டம்- பாங்கியிற்கூட்டம் முதலானவற்றையும், காட்சி—ஐயம்- தெளிதல்—நயப்பு முதலிய துறைகளையும், நிரல்பட வகுத்துக் கூறிற்றிலர். **திருவள்ளுவர்** தாம், முதன்முதலில் தம் திருக்குறள் நூலுள், காமத்துப் பாலில் ஒரு தொடர்பு பட, அவை தம்மைச் சிறிது வகுத்துரைத்தனர்! ஆசிரியர் **நக்கீரனார்** தமது களவியலுரையில், அதற்குப்பின் மேலும் சிறிது விளக்கம் தந்தார்.

என்றாலும், இஞ்ஞான்று வழங்கும் **கோவை** நூல் களிற் காணப்பெறும் நானூறு (400) துறைகளையும், முதன்முதல் வரிசையாக்கி. ஒழுங்கு செய்து, கோவைப் படுத்தித் திருத்தமுறத் தந்தவர் மாணிக்கவாசகரே என்பது அறிதற்குரியது. அப்பெருஞ் சிறப்பினைக் கருதியே **'கோவையார்'** என்னும் சொல், காரண இடுகுறி யாக, வேறுபிற எந்தக் கோவை நூல்னையும் குறி:யாமல், மாணிக்கவாசகரது நூலினையேகுறிப்பதாயிற்று என்பது! எனவே, இன்னோரன்ன பலதிற நலமும் கருதியோர்ந்து, மாணிக்கவாசகரின் மாட்சிமையினை மதித்துணர்ந்தமை பற்றியே, குமரகுருபரர் **'காமம் சான்ற ஞானப்பனுவல்'** எனவும், 'பைந்தமிழ் நவின்ற செந்நாப்புலவன்' எனவும் பாராட்டினராதல் வேண்டும்!

**காமச்சுவை :**

இனி, இத்திருக்கோவையாரின் செய்யுட் சுவை நலம் எல்லாம், முற்ற எடுத்து மொழிதல் என்பது இயலாத

தாகலின், 'ஒருதுழிச் சொன்றிக்கு ஓரவிழ் பதமாம்' (தாலிபுலாகம்) என்னும் முறைமைபற்றி, ஒருசில பாடல்களை மட்டும் ஈண்டுக் காண்போம். 'எய்தலெடுத் துரைத்தல்' என்பது ஒருதுறை. ஒரு தலைவன் பற்றிப் பாடப் புகுந்த மாணிக்கவாசகர், தலைவன் தலைவியைப் புணர்ந்து மகிழ்ந்தான் எனக் கூறற்பாலதனைச் சிறிது மறைத்துத் தலைவன் 'திரைகடலோடி' வாணிகம் செய்து பொருளீட்டினான் என்பது போலக் கூறுகின்றார்.

**புலவித் திரைபொரச், சீறடிப் பூங்கலம்**
**சென்னியுய்ப்பக்,**
**கலவிக் கடலுட் கலிங்கம்சென் றெய்திக்,**
**கதிர்கொள்முத்தம்**
**நிலவி, நிறைமது ஆர்ந்து, அம் பலத்துநின்றோன்**
**அருள்போன்(று),**
**உலவிய லாத்தனம் சென்றெய்த லாயின ஊரனுக்கே''**

என்வரும் பாடல், 'புலால் நாற்றம் வீசி அலைகள்மோத, சிறிய அடிப் பகுதியினையுடைய அழகிய மரக்கலத்தினை, அலைகளின் தலையிற் கொண்டு செலுத்தி, எல்லா ஆறுகளும் பொருள்களும் வந்து கலக்கும் கடலின்கண் சென்று, கலிங்க நாட்டினை அடைந்து, முத்து வாணிபம் செய்து, ஈட்டிய பொருள்வளத்தால், தலைவன் மைந்துற்று மயங்கி மதுவருந்தி மகிழாநிற்பவும், அம்பலவாணரது திருவருட் செல்வம் போல, அழியாத பெருஞ் செல்வ மானது, அவனுக்கு எய்துவதாயிற்று' என மேனோக்காக் ஒரு பொருளும்;

''புலவி (ஊடல்) ஆகிய அலைவந்துமோதக், காதலியின் சிற்றடியாகிய அழகிய அணியினைத், தலைவன் தன்தலையிற் சூடுதலான் அப்புலவி நீக்கிக், கலவியாகிய கடலுள் துகிலைப் பற்றிச் சென்று, பற்களாகிய ஒளிமிகுந்த முத்தத்தின்கட் பொருந்தி, தலைவியின் இதழ்களில் நிறைந்த நீராகிய

மதுவைப் பருகி (அதரபானம் செய்து) மகிழும் தலைவனுக்கு, அம்பலவனது அருளையொத்த, என்றும் தளர்தலில்லாத முலைகள் சென்று பெற லாயின'' எனப் பிறிதொரு பொருளும் படப் **'புலவி கலவி-கலிங்கம்-முத்தம்-மது-தனம்'** முதலிய சொற் கள், இருபொருட் (சிலேடைச்) சிறப்புடன் அமைந்து, காமச்சுவை கனிந்து, எத்துணை அழகியதாய்த் திகழ் கின்றது! இதன்கண் அகப்பொருளும், இறையியல் அருட்பொருளும் ஒருங்கமைந்து விளங்குதல் காணலாம்.

**சொற்பொருள் நுட்பங்கள் :**

மேலும், தலைவன் தலைவியரது புணர்ச்சியின்கண் உள்ளமும் உடலும் உயிரும் உணர்வும் ஒன்றாகிக் கலத் தலின், அப்புணர்ச்சியைக் **'கலவி'** என்றும்; அக்கலவி இன்பத்தின் எல்லைக்குக் கரை காணாமையிற் **'கடல்'** என்றும்; கடலில் அலைபோலப் புணர்ச்சிக்கண் முன் நிகழ்வது புலவியாகலின் **'புலவித் திரைபொர'** என்றும்; புலவி நிகழ்ந்தவழித் தலைவன் தலைவியைப் பணிந்து நிற்றல், ''மனைவி உயர்வும் கிழவோன் பணிவும், நினையுங் காலைப் புலவியுள் உரிய'' என்று, தொல் காப்பியனார் கூறுதற்கேற்ப இயல்பாகலின், **'சீறடிப் பூங்கலம் சென்னி உய்ப்ப'** என்றும்; தலைவன் பணியவே தலைவி புலவி நீங்கப் புணர்ச்சிநிகழுமாகலின், அதனைக் குறிப்பால் **'கலிங்கம்'** (ஆடைநெகிழ்த்து) **சென்றெய்தி'** என்றும்;

அதுபோழ்தத்துப் 'பாலொடு தேன்கலந்தற்றே பணி மொழி வாலெயிறு ஊறியநீர்'' என்று திருவள்ளுவர் கூறுமாறு போல, இதழ்நீர் பருகல் இயல்பாகலின், ''கதிர் கொள் **முத்தம்** நிலவி, நிறை **மதுஆர்ந்து''** என்றும்; புணர்ச்சி நிகழுங்கால் 'சுவர்க்கவேதி' என்றும், 'சகஸ்ர வேதி' என்றும், புகழ்ந்தோதப்பெறும் தனங்கள், போக நுகர்ச்சிக்குரிய துணைப்பொருளாகப் பொலிதலின்,

'**தனம்** சென்றெய்தலாயின' என்றும்; இங்ஙனம் காமச் சுவை கனியத் தொடுத்துரைப்பினும், கடவுளுணர்ச் சியைக் கலந்து புகுத்திப்பெருக்கச் ''சார்ந்தனன் சங்கிலி மென்தோள் தடமுலை, ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்தூர் ஐயன் அருளதே' என்று **சுந்தரர்** கூறுமாறு போல, ''அம்பலத்தான் **அருள்** போன்று'' என்றும்; மணி மொழியார் கூறும் திறம், எத்துணைஅணிநலம் உடைய தாய்த் திகழ்ந்தொளிர் கின்றது!

**சிந்தாமணிச் செய்யுள்:**

காமச்சுவை கனிந்ததாயினும், அருளுணர்வுடன் கலந்து சிறந்தொளிரும் அழகிய இப்பாடல்,

***பவழவாய் பரவை அல்குல் என்றிவை பருகும் வேலான்***
***கவழமார் களிற்றை ஒத்தான்! காதலி கரும்பை ஒத்தாள்!***
***தவழ்மதுக் கோதை மாதர், தாமரைப் பூவதாக,***
***உமிழ்நகை வேலினானும், ஒண்சிறை மணிவண்டொத்தான்!***

எனவரும் சிந்தாமணிப் பாடல்கள்போல, வெளிப்படை யாய், இடக்கர் அடக்கல் இன்றி இழிந்து செல்லாமல். எத்துணை மேம்பாடுடையதாய் விளங்கித் திகழ்கின்றது!

**ஞானப் பொருள்:**

'உயிரென வியத்தல்' என்பது ஒரு துறை. இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவியைக்கூடி இன்புற்றுப் பிரிந்து சென்ற தலைவன், பின்னர் மறுநாள் அப்பொழிலிடைப் போந்து அவளைக் கண்டு மகிழ்ந்து, தன்னுயிர் என அவளை வியந்து கூறுதல், இதன் கருத்தாம். இச் கருத்தமைய,

***காணா மரபிற்று உயிர்என மொழிவோர்,***
***நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே!***
***யாஅம் காண்டும் எம்அரும்பெறல் உயிரே!***
***சொல்லும் ஆடும்! மென்மெல இயலும்!***
***கணைக்கால் நுணுகிய நுசுப்பின்,***
***மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே!***

என்று பழம்பாடல்ஒன்றுவரும். அதனைத் தழுவி, 'நேற்று அன்புடன் என்னைக் கூடிப் பின்னர், என்மனம் வருந்தப் பிரிந்து சென்று. தோழியர் கூட்டத்திற் சேர்ந்து, இன்பத்தைச் செய்தலின் அமிழ்தமாய், துன்பத்தைச் செய்தலின் அணங்காய், அரன்அம்பலம் போலும் அரும் பெரும் ஒளியையுடையதாய், என் உள்ளத்தின் கண்ண தாய்ப், பெரிதும் வஞ்சனையுடையதாய், இதோ என் னுயிர் வந்து நிற்கின்றது'' என்னும் பொருளமைய,

**''நேயத்த தாய், நென்னல் என்னைப் புணர்ந்து, நெஞ்சம் நெகப்போய்,**
**ஆயத்த தாய், அமிழ் தாய், அணங்காய், அரன் அம்பலம் போல்**
***தேயத்த தாய், என்றன்சிந்தைய தாய்த்தெரி யிற்பெரிதும்***
***மாயத்த தாகி, இதோவந்து நின்றதென் மன்னுயிரே''***

என்னும் அழகிய பாடலை, மாணிக்கவாசகர் அருளிச் செய்கின்றார். தலைவன் தன் தலைவியை உயிரென வியத்தலாகவே, அடிகள் இதனைப் பாடினர் போலத் தோன்றினும் ஊன்றி நோக்குவார்க்கு, இறைவன் தமக்குச் செய்த திருவருளின் திறத்தினையே சிறந் தெடுத்துப் பாடிப் பரவினராதல் தெளியப்படும்! இதன்கண்,

''என்பால் அருளுடையதாய், முன்னர்த் திருப் பெருந்துறையில் குருந்தமர நீழலில் வந்து என்னைக் கூடிப், பின்னர் என் உள்ளம் 'தீயில் வீழ்கிலேன் திண் வரை உருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே' என வருந்துமாறு பிரிந்து சென்று, தன் மெய்யடியார் கூட்டத்ததாய், நினைக்குந்தொறும் அமிழ்தம் போல இன்பம் செய்து, கட்புலனாகாமையால் துன்பம் செய்து, தில்லையம்பலம் போலும் பல நல்ல தலங்க ளில் எழுந்தருளி, என் மனத்தினும் நிலைபெற்று, இங்ஙனம் தான் ஒரு பொருளே, பல பண்பும் செயலும் உடைமையின் வஞ்சனை மிக்கதாய், என் மன்னுயிரா

கிய முழுமுதற் பெரும்பொருள் ஈண்டு வந்து
தோன்றா நின்றது''.

என இறையருட்டிறம் விளக்கும் பிறிதொரு பொருளும் அமைய, இப்பாடல் இயன்றுண்மை கண்டு கொள்க!

**புனல்தரு புணர்ச்சி :**

இங்ஙனமே, வேறு ஓர்இடத்தும் 'புனல்தரு புணர்ச்சி' யுரைத்துத் தோழிக்குக் குறைநேரும் தலைமகள் கூற்றாக,

**''ஒங்கும் ஒருவிடம் உண்டு, அம் பலத்தும்பர் உய்ய. அன்று**
**தாங்கும் ஒருவன் தடவரை வாய்த், தழங்கும் அருவி**
**வீங்கும் சுனைப்புனல் வீழ்ந்து அன்று அழுங்கப் பிடித்தெடுத்து**
**வாங்கும் அவர்க்கறி யேன்,சிறி யேன்சொல்லும் வாசகமே''**

எனவரும் பாடற்கண், அத்துறைக்குரியபொருள் மட்டுமேயன்றிப், ''பிறவிக் கடலில் யான் விழுந்து கெடப்புகும் நிலையில், தாமே வலிந்துவந்து பிடித்தெடுத்து, அதனினின்றும் என்னைக் காத்தருளிய பேருதவியாளராகிய, இறைவனுக்குச் சிறியேனாகிய யான், நன்றியுரையாகச் சொல்வது ஒன்றினையும் அறிகின்றிலேன்'' எனப் பிறிதுமொரு பொருள்படத், தம்மைப் பிறவிக் கடலின் வீழாமல் காப்பாற்றிய இறையருட் செய்தியினை விதந்துரைத்தல் கண்டு கொள்க! ''**தனியனேன் பெரும்பிறவிப் பவ்வத்து**' எவ்வத் தடந்திரையால் எற்றுண்டு பற்று ஒன்று இன்றி' என்னும் திருவாசகப் பாடலின் (31) பொருளைத் தழுவி, இவ்வகப் பொருட்பாடல் அமைந்திருத்தல், நாம் அறிந்து இன்புறற்பாலது.

**கலையுணர்வும், கடவுளுணர்வும் :**

சங்ககாலப் புலவர்கள் கலையுணர்வுக் கண்கொண்டு பாடினராக, மாணிக்கவாசகர் இறையருளுணர்வுக் கண் கொண்டு பாடினர் என முன்னர்க் கூறினோம். அதனை இரண்டொரு சான்றுகளாற் காண்போம்! சங்ககாலப் புலவர்கள் **கடல், மலை, காடு, வயல்** முதலிய பலவற்றி

னையும் குறித்துப் பாடியுள்ளனர். நெய்தற்றிணை பற்றிப் பாடிய சங்கப் புலவர்கள் அனைவரும் கடலைப் பாடியுள்ளனர். அவர்களெல்லாம் கடலின் அலை, கழி, கடல்படுபொருள்கள், கடற்கரைக்கண் வாழும் பரதவர் வாழ்க்கை, முதலியன குறித்தே பாடிச் சென்றனர். ஆனால், மாணிக்கவாசகரோ கடலைப் பாடினராயினும், அக்கடலையும் 'சிவம் எனும் செம்பொருள்' ஆகவே கண்டு கருதிப் பாடினர்.

இச் செம்பொருட் காட்சி மாணிக்கவாசகர்க்குப் போலச் சங்ககாலப் புலவர்க்கு வாய்த்திலது! ''கடலில் சங்குகள் உள்ளன. அவை முத்துக்களை ஈனுகின்றன. அவற்றைக் கழிகளின் வாயிலாக நாம் பெறுகின்றோம். கடலில் கங்கை முதலிய ஆறுகள் வந்து கலக்கின்றன. ஆரவாரம் மிக்க மரக்கலங்கள் இயங்குகின்றன. அத் தகைய **இக்கடலானது**, தன் திருவடிக்கண் எமக்கு நிகழும் அன்பின் பற்றால், எமக்குக் கொடுக்கும் முத்தியினை யாம் பெருமாறு, எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் வானத்தினையும் கடந்து நிற்பினும், ஒரு மானுட வடிவு கொண்டு எழுந்தருளிப் பொங்கும் புனற் கங்கையாற்றினைச் சடையிற் சூடி, ஆர வாரம் மிக்க பாறு (பருந்து, கழுகு) என்னும் பறவைகள் சூழ்கின்ற. உயர்வுமிக்க தலையோட்டை ஏந்தும் சிவ **பெருமா**னை ஒத்துள்ளது'' என்று, கடலைச் சிவபெருமா னோடு ஒப்புடையதாகக் கண்டு, மென்மொழியும் வன் மொழியும் விரவக் கூறிய தோழிக்குத் தலைவி ''அறியாள் போன்று குறியாள் கூறல்'' என்னும் அகப்பொருள் துறையில்,

***''சங்கந் தரும்முத்தி யாம்பெற வான்கழி தான்கெழுமிப்***
***பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுலவு***
***துங்கம் மலிதலை ஏந்தலின், ஏந்திழை! தொல்லைப் பன்மா***
***வங்கம் மலிகலி நீர்,தில்லை வானவன் நேர்வருமே''***

என்று பாடிய, மணிமொழியாரது இறையருளுணர்வின் சிறப்பினை என்னென்போம்!

இங்ஙனமே, பெண்களின் கண்களைச் சங்ககாலப் புலவர்கள் முதல் இஞ்ஞான்றைக் கவிஞர்கள் வரையில், புனைந்து புகழ்ந்து பாடாத புலவர்கள் இல்லை எனினும், ''தலைவியின் கண்கள் இறைவன்பால் தாம் வைத்த அன்புபோல **அகன்றும்**, அவ்விறைவன் போக்கிய தம் தீவினைகளைப் போன்று **கறுத்தும்**, தில்லையம்பலம் போன்று **ஒளிமிகுந்தும்**, அப்பெருமான் தனது சிவந்த தோள்களில் அணியும் வெண்ணீற்றினைப் போலச் **செவ்வரி** ஓடி, **வெண்மை** மிக்கும், அவனது பூங்கழலின் 'பொருள் சேர்' புகழினைப் போல **நீண்டும்** உள்ளன'' (109) என்று, மணிமொழியார் கண்ணிற்கு இலக்கணம் காட்டிப் 'பாடியவாறு போல, அருளுணர்வு கலந்து பாடினோர் எவரேனும் உளரோ? இன்னோரன்ன கோவைத் திருப் பாடல்கள், மணிமொழியாரின் கலையுணர்வையும், அருளுணர்வையும் நலமுற விளக்கும் சான்றுகளாகும்.

### சங்கநூற் புலமை :

மாணிக்கவாசகர் சங்க காலத்தை அடுத்துத் தோன்றியவர்; சங்ககாலப் பண்பாட்டினை அழியாமற் காக்க விரும்பி முயன்றவர்; அதற்காகவே காதலுணர்ச்சியோடு கடவுளுணர்ச்சியும் ஒருங்கே பிணைத்துத் திருக்கோவை யார் பாடினர் என முன்னர்க் கூறினமாதலின், அவர்தம் சங்கநூற் பயிற்சியின் பெற்றியினையும், ஈண்டு இரண்டொரு சான்றுகளாற் காண்போம்.

### அகநானூறு :

''பரத்தையர் சேரியினின்றும் போந்த தலைமகன், தன்பாற் புலவிகொண்ட தலைவியின்பால், ''நின்னையன்றி' யான் பிறர் ஒருவரையும் அறியேன்' என்று பொய் கூறினனாக, 'இங்ஙனம் நீ பொய் கூறுவது எற்றுக்கு? இன்றுகாலை யாவரும் விழையும் நம் பொலந்தொடிப்

புதல்வன் தெருவில் தேர் விளையாடிக் கொண்டிருந்தான். அப்பொழுது அவ்வழியே ஒருத்தி வந்தாள். வந்தவள், அவனோடு நின்னிடையுள்ள உருவ ஒப்புமைகள் பலவும் கண்டு களிகூர்ந்து, சுற்று முற்றும் பார்த்தாள். பின்னர்த் தன்னைக் காணுநர் யாரும் இலர் எனக் கருதி, அவனைக் 'குழந்தாய்! என்னுயிரே! வருக!' என்று கூறி எடுத்துத் தன் மார்போடு அணைததுக் கொண்டு மிகவும் மகிழ்ந்து கொண்டிருந்தாள். அதுகாலைத் தற்செயலாக யான் குழந்தையைத் தேடிக்கொண்டு அங்குச் செல்ல நேர்ந்த போது, யான் அவளைக் கண்டேன். அவளும் என்னைக் கண்டுகொண்டாள்.

அதனால் அவள் நெஞ்சம் துணுக்குற்று, முகம் சிறிது மாறுபட்டு நாணி மயங்கி நின்றாள். காரண மின்றி என்னைக் கண்டு துணுக்குற்று நாணிமயங்கி நின்றமையின், 'அவள்யாவள்?' என்று நுண்ணிதின் ஓர்ந்து நோக்கித் தெளிந்து கொண்ட யான், 'குறும களே! ஏன் நாணி மயங்குகின்றாய்? நீ தானும் இவனுக்கு ஒரு தாயே ஆகற்பாலை! இங்கே வருக' என்று அவளை அன்புடன் அழைத்தேன், அவளும் விரைந்தோடி வந்து என்னைத் தழுவிக்கொண்டு, களவுஉடம்படுநர் போலத் தலை கவிழ்ந்து, நிலங்கிளைத்து நாணி நின்றாள். அங்ஙனம் நின்ற அவளது நிலையும் இயல்பும் கண்டு, பொற்பும் கற்பும் மற்றும்பிற நற்பண்பும் உடைய இவள், நின் புதல்வனுக்குத் தாயாகும் முறைமை யினளாதல் பொருத்தமுடையதேயாகும்' என நினைத்து யான் உள்ளம் தெளிந்து, மகிழ்ச்சியுற்று அவளை விரும்பிப் பாராட்டினேன்! இவ்வாறு நினது பரத்தையை யான் நேரே கண்டறிந்து கொண்டுவிட்டேன் ஆகவும், என்னிடம் நீ, 'யான் யாரையும் அறியேன்' என்று பொய்கூறி ஏமாற்ற முயலுதல் எற்றுக்கு?'' என்னும் பொருளமையச் சிறந்ததொரு பாடல், அகநானூறு (16)

என்றும் சங்ககால நூலில் வருகின்றது. அதனையே அடியொற்றி முற்றிலும் தழுவி,

**ஐயுற வாய்நம் அகன்கடைக் கண்டு, வண் தேர்உருட்டும்**
**மையுறு வாட்கண் மழவைத் தழுவ, மற்று உன்மகனே,**
**மெய்யுற வாம்இதுன் இல்லே, வருகென வெள்கிச்சென்றாள்**
**கையுறு மான்மறி யோன், புலியூர் அன்ன காரிகையே''**

எனத் திருக்கோவையாரின்கண்வரும்அழகிய அரும்பாடல், மாணிக்கவாசகரது சங்கநூற் புலமையின் மேன்மையினையும், ஈடுபாட்டினையும் இனிது விளக்கும் சான்றாக நிலைபெறும்!

**கலித்தொகை :**

இஃதொன்றோ! தலைவனுடன் உடன் போக்குச் சென்ற தலைவியைத் தேடிக்கொண்டு செல்லும் ஒரு செவிலித்தாய், சுரநெறியில் முக்கோற்பகவரை எதிர்ப்பட்டு, ''எறிக்கும் வெயிலினை மறைக்கும் குடையினை ஏந்திக் கொண்டு, அதன் நிழலில், கரகத்தையும் முக்கோலையும் தோளிலே வைத்துக்கொண்டு, புலனடக்கமுடையவராய் இறைவனையே நினைந்து செல்லும் இயல்பான ஒழுக்கமுடைய அந்தணர்களே! கொடிய இக்காட்டு நெறியிற் செல்லும் நீவிர், இவ்வழியே என் மகள் ஒருத்தியும், பிறள்மகன் ஒருவனும், அயலவர் அறியாமல் தம்மிற்றாமே கூடினவராய், இதுபொழுது அதனைப் பிறர் அறிந்துகொள்ளும் நிலையினராய், உடன் போக்கிற்சென்றனர்.

அத்தகையவர் இருவரை நீவிர் கண்டனிரோ?'' என வினவக் ''காணாதிருந்தேம் அல்லேம்; கண்டனம்! இக் காட்டில் ஆணெழில் அண்ணலொடு அருஞ்சுரம் முன்னிய மாணிழை மடவரலுக்கு, நீர் தாய்போலக் காணப்படுகின் றீர்! மலையிலே பிறக்கும் சந்தனம், பூசிக் கொள்பவர் களுக்கு அல்லது, அம்மலைக்கு என்ன பயனைத் தரும்? நீரிலே பிறக்கும் வெண்முத்தும், மாலையாகத் தொடுத்து

அணிந்து கொள்பவர்களுக்கல்லது, அந்நீருக்கு என்ன நன்மையைச் செய்யும்? யாழிற் பிறக்கும் எழுநிலை இன்னிசை, அதை எழுப்புவார்க்கும் கேட்பார்க்கும் பயன ளிப்பதன்றி, அவ்யாழுக்கு யாது நலனை அளிக்கும்? அது போல நும்மகளும் பயன்படும் பருவத்தில் நுமக்குப் பயன் படாள். ஆதலால், மிகுந்த கற்பினுடைய அவள் பொருட்டுத் துன்புற்றுக் கவலை எய்துதல் வேண்டா. அவள் தன் தாய் தந்தையரினும் தனக்குச் சிறந்த கணவனை வழிபட்டு, அவன் பின்னே சென்றனள். அவளது செயல் இம்மைக்கும் மறுமைக்கும் நலம் பயப்ப தேயாகும்'' என்று முக்கோற் பகவர் மொழிவதாக, ஓர் அழகிய இனியபாடல் (9), கலித்தொகையின்கண் வருகின் றது. அப்பாடலின் சொற்பொருட் சுவைநலங்களில் ஈடு பட்டு மகிழ்த்து,

***''சுரும்பிவர் சந்தும், தொடுகடல் முத்தும், வெண்***
***சங்கும் எங்கும்***
***விரும்பினர் பாற்சென்று மெய்க்கணியாம்; வியன்***
***கங்கைஎன்னும்***
***பெரும்புனல் சூடும் பிரான் சிவன் சிற்றம் பலம் அனைய***
***கரும்பன மென்மொழியாரும், அந் நீர்மையர்***
***காணுநர்க்கே''***

என மாணிக்க வாசகர் பாடியுள்ளமை கண்டுகொள்க! மற்றும், இக்கலித்தொகைப் பாடலினையே அடிப்படை யாகக் கொண்டு, திருக்கோவையாரில், அதனை 241 முதல் 249 வரையுள்ள ஒன்பது பாடல்களாக விரித்துரைத்து நம்மை மகிழ்விக்கின்றார், மாணிக்கவாசகப் பெருமான்!

***சிலப்பதிகாரம் :***

இனி, சிலப்பதிகாரத்தில் சுவையெல்லாம் ஒருங்கு திரண்டு கனிந்து, இனிமை நிரம்பித் துளும்பி வழியும் பகுதி, ***கானல்வரி*** என்பதாகும். அப்பகுதியில் உள்ளம்

உருக்கும் இசைநலமும், அகனைந்திணைப் பொருட்டுறை வள்ளும், செந்தமிழ்ச் சொல்லழகும், பிறவும் பெரிதும் பொங்கித் ததும்பிப் பொலிகின்றன. கலையுளம் படைத்துக் கவிதைநலம் காணும் இயல்பினர்க்கு, இதனிற் சிறந்த ஈடுபாடு, வேறு பிறிதெதன்கண்ணும் நிகழ்தல் இல்லை. இக் கானல்வரிப் பகுதியில், தலைவனுக்குத் தலைமகளை மணம் புணர்விக்க உடன்பட்ட தோழி, தலைவியின்பாற் போந்து, தலைவன் அவளைக் காதலிக்கும் ஆற்றையும், அது கைகூடாதொழியின் ஒருகால் அவன் பித்துற்று உயிர் துறப்பனோ? என்னும் தன் ஐயுணர்வையும் எடுத்துக்கூறி, அவளைத் தலைவனை மணக்குமாறு வற்புறுத்தும் முறையில், ''வலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தது'' என்னும் துறையில்,

***''புணர்துணையோ டாடும் பொறியலவன் நோக்கி***
***இணர்ததையும் பூங்கானல் என்னையும் நோக்கி,***
***உணர்வொழியப் போன ஒலிதிரைநீர்ச் சேர்ப்பன்,***
***வணர்சுரி ஐம்பாலோய்! வண்ணம் உணரேனால்!''***

என அழகியதொரு பாடல் வருகின்றது. ''வளைந்த கடைகுழன்ற கூந்தலையுடைய தலைவியே! நேற்று நம் கானற் சோலையிடத்தே, நலம்பலவும் சிறந்த ஆண் மகன் ஒருவன் போந்தான். போந்த அவன், தன் துணையாகிய பெண்நண்டுடன் பொருந்தி விளையாடும் ஆண்நண்டொன்றினை உற்று நோக்கினான். அதனை நோக்கிக் கொண்டே, என்னையும் உற்று நோக்கினான். அவன் 'நோக்கிய நோக்கம்' மிக எளிய இந்நண்டுகள்தாமும் தம்முள் ஒன்றை ஒன்று விரும்பிப் புணர்ந்து இன்புறா நிற்க, நமக்கு இதுகைகூடிற்றிலையே எனவும், நண்டு தன் துணையோடு ஆடுதல் போல, யானும் தலைவியோடு கூடி இன்புறுமாறு நீயே அவளை என்னோடு சேர்ப்பித்தல் வேண்டும் எனவும் கூறும் குறிப்புப் போலத் தோன்றியது. அங்ஙனம் பல குறிப்புப்பட நோக்கிய அவன், சிறிது

பொழுது கழிந்ததும், தன்னுணர்வு தன்னை நீங்க,மிகவும் வருந்திச் சென்றனன். சென்ற அவன், பின்னர் என்னாயினனோ? அதனை யான் அறிகின்றிலேன். அத் தகையாற்கு அருள் செய்யாதிருத்தல் நமக்குத் தகவன்று செய்யாதொழியின், அவன் தன் உயிரை மாய்த்துக் கொள்ளவும் கூடும்'' என்பது அதன் பொருள். இப் பாடலைப் பலகாலும் சுவைத்து மகிழ்ந்ததன் பயனாகவே போலும், நமது வாதவூரடிகள்

***''நீகண் டனைஎனின் வாழலை, நேரிழை! அம்பலத்தான்***
***சேய்கண் டனையன், சென் றாங்கோர் அலவன்தன் சீர்ப்பெடையின்***
***வாய்,வண் டனையதோர் நாவற்கனி நனி நல்கக்கண்டு,***
***பேய்கண் டனையதொன் றாகிநின்றான், அப் பெருந் தகையே''***

எனத் திருச்சிற்றம்பலக் கோவையாரின்கண் அருளிச் செய்தனராதல் வேண்டும்! 'புணர்துணையோடாடும் பொறியலவன் நோக்கி' என்றதனை 'ஓர் அலவன் சீர்ப் பெடையின்வாய் நாவற்கனி நனிநல்கக் கண்டு' என்றும்; 'என்னையும் நோக்கி' 'என்றதனை ஓராற்றால் தழீஇ 'நீகண்டனை எனின் வாழலை' என்றும்; 'ஒலிதிரை நீர்ச்சேர்ப்பன்' என்றதனை 'அம்பலத்தான் சேய் கண் டனையன், பெருந்தகை' என்றும்; 'உணர்வு ஒழியப் போனான்' என்றதனைப் 'பேய்கண்டனைய தொன்றாகி நின்றான்' என்றும் மணிவாசகர் அமைத்திருக்கும் அருமை அறிஞர்கட்கு ஆராப் பெருவிருந்தாகற்பாலது. ''அகலிலை நாவல் ஒண்துறையுதிர்ந்த, கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன், தாழை வேரளை வீழ்துணைக்கு இடூஉம் அலவன்'' (அகம் 380) எனவும், பிறவாறும் வரும் பகுதி களும், ஈண்டு அறிந்து மகிழற்பாலன.

இங்ஙனமே, தொல்காப்பியம் - திருக்குறள்-இறை யனார்களவியலுரை-குறுந்தொகை-நெடுந்தொகை-

நற்றிணை முதலிய சங்கநூற் சொற்பொருட் சுவைநலங் களையெல்லாம், கற்றுணர்ந்து ஈடுபட்டுத் திளைத்து மகிழ்ந்து, அவைதம்மைத் தழுவித் தம் நூலினை மணி வாசகர் அழகுற யாத்திருக்கும் திறம், நம்மனோர்க்குப் பயில்தொறும் கழிபெருங் களிப்பூட்டா நிற்கும். இவ் வாற்றால் அடிகளின் சங்கநூற் புலமையினை ஒருவாறு உணர்ந்து கொள்க!

**உள்ளுறைப் பொருள்நலம் :**

சங்க நூல்களின் சிறப்பியல்புகளில், அவற்றின் உள்ளுறைப் பொருள்நலமும் ஒன்றாகும். உள்ளுறை யமைத்துப் பாடுதலில், நுண்மாண் நுழைபலம் மிக்க சங்ககாலச் சான்றோர்களைப் போலப் பிற்காலப் புலவர்கள் திறமை பெற்றிலர். பிற்காலப் புலவர்களின் பாடல்களில் உள்ளுறைப் பொருள்நலம் காண்டல் பெரிதும் அரிதேயாம். தம் பாடல்களில் உள்ளுறைப் பொருள்நலம் செறியப்பாடும் கவிதைத் திறம், சங்க காலப் புலவர்களோடு பெரும்பாலும் மறைந்துவிட்ட தென்று கூறுதல்தவறாகாது! ஆனால், நம் மணிவாசகரோ, சங்ககாலப் புலவர்களோடெப்ப உள்ளுறை யமைத்துப் பாடவல்ல கவிதைத்திறம் மிக்க நல்லிசைப்புலவராவர்!

பொருள்வயிற் பிரிந்து ஒருவழித் தணந்த தலைமகன் வரவும் வரைவும் நீட்டிப்ப ஆற்றாளாய தலைவி, ''நீ தலைவன் வாராமைக்காக வருந்தற்க; வருந்துதியாயின் அது பிறர் ஐயுறுதற்கு ஏதுவாகித் தீங்கு பயக்கும்'' என்று ஆறுதல் கூறிய தோழியை நோக்கி,'தலைவனைப் பிரிந்தும் மனம் வருந்தாது, 'அரிதாற்றி அல்லல் நோய் நீக்கிப் பிரிவாற்றிப் பின்னிருந்து வாழ்வார் பலர்'. ஆனால் யானோ அது பெறுமாறில்லை. தலைவனது பிரிவை இமைப்பொழுதும் ஆற்றியிருத்தற்கு என்னால் இயல கின்றிலதே! யான் என் செய்வேன்? இஃதறியாது என்ன ஆற்றியிரு என்று நீ தேற்றுரை புகல்வது, 'உருள்கின்ற

மணிவட்டைக் குணில் கொண்டு துரந்ததுபோல்' எனக்கு மேலும் மிக ஆற்றாமையினையே விளைவிக்கின்றது'' என மாறுகூறுவதாகவருகின்ற,

''கான மஞ்ஞை அறைஈன் முட்டை,
வெயிலாடு முசுவின் குருளை உருட்டும்
குன்ற நாடன் கேண்மை, என்றும்
நன்றுமன்! வாழி தோழி! உண்கண்
நீரொடு ஒராங்குத் தணப்ப,
உள்ளாது ஆற்றல் வல்லு வோர்க்கே''

எனவரும் குறுந்தொகைச் செய்யுளோடு ஒப்புநோக்கி வைத்துணர்ந்து மகிழறபாலது. இங்ஙனம் திருக்கோவை யாரிற் சுவைகெழுமலரும் உள்ளுறைப் பொருள் அமைந்த இனிய செய்யுட்கள் பலப்பல.

*முடிவுரை :*

இதுகாறும் கூறி வந்தவாற்றால், மாணிக்கவாசகரது திருவாசகம் போலத் திருக்கோவையாரும், ஒரு சிறந்த தெய்விகப் புனித நூல் என்பதும்; பலபெருஞ் சான்றோர் கள் தொன்னெடுங் காலமாக வழிவழியே, தம் உயிரினும் இனிய விழுமிய நூலாக அதனைப் போற்றி வந்துள்ளனர் என்பதும்; அதற்கேற்பக் குமரகுருபர அடிகள் அதன் சிறப்பினை ஆராய்ந்து வியந்து, ''காமம் சான்ற ஞானப் பனுவல்'' என்று போற்றிப் புகழ்ந்தமை பெரிதும் பொருத்தமாம் என்பதும்; தூய காமச்சுவை மலிந்து, ஞானப்பொருள் நிறைந்த இந்நூலை யாத்த மாணிக்க வாசகரின் குறிக்கோள் இது என்பதும்; அவர் சங்கநூற் பயிற்சியில் ஈடுபட்டுத் திளைத்து இன்புற்றவர் என்பதும்; சங்கநூல் வளங்களெல்லாம் திருக்கோவையாரின்கண் விளங்கித் திகழ்கின்றன என்பதும்; பன்னிரு திருமுறைக ளுள் பழுதற்ற உரை பெற்றதாக. இந்நூலுக்கு ஒரு பெருமை தந்த பேராசிரியரின் உரைநலங்கள் இவை என்

பதும்; ஒருவாறு இயன்ற பெற்றி விளக்கப் பெற்றன. இத்தகைய தெய்விகப் புனிதச் செந்தமிழ் அமிழ்தக் கவிதைத் திருநூலைப் பலகாலும் ஓதிப் பயின்று, மக்களெல்லாம் இன்புற்று நலமெய்துக என வேண்டி, இறையருளை வாழ்த்தி அமைகின்றேம். செந்தமிழ் வெல்க! சிவநெறி செழிக்க!

**சலம்இலாச் சைவச் சான்றோர்!**
**சச்சிதா னந்தர்! எந்தை!**
**தலைமையில், சென்னைச் சைவ**
**சித்தாந்த சமாசச் சார்பில்,**
**நலம்மிகு 'காமம் சான்ற**
**ஞானமார் பனுவல்' என்னும்**
**கலைநிறை தலைப்பில், யான்செய்**
**கனிதமிழ்ச் சொல்நூல் இஃதாம்!**

(சொல்நூல்—சொற்பொழிவுக் கட்டுரை)

[* இக் கட்டுரை, சென்னைப் பூக்கடை அருள்மிகு சென்னமல்லீசுவரர் திருக்கோயிலில், சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாசத்தில் மாதாந்தர வழிபாட்டுச் சிறப்புக் கூட்டத்தில், ''சைவப் பெரியார்'' திரு. **ச. சச்சிதானந்தம்பிள்ளை** அவர்கள் தலைமையில், **27-12-1952** அன்று, 'காமம் சான்ற ஞானப் பனுவல்' என்னும் தலைப்பில் ஆற்றிய சொற்பொழிவைத் தழுவி எழுதியது. இவ் விரிவான கட்டுரை, இராவ்பகதூர் **சி. எம். இராமச்சந்திரன் செட்டியார்** அவர்களால், **1953** ஆம் ஆண்டின் ஏப்பிரல், மே மாதச் சித்தாந்தம், இதழ்களில் வெளியிடப்பெற்றது. சைவத் தமிழறிஞர்கள் பலராலும் போற்றிப் பாராட்டிப் புகழப்பெற்றது. இக் கட்டுரையின் வாயிலாகவே 'சித்தாந்தம்' இதழுக்குப், பல ஆண்டுகள் (**1953** முதல் **1962** வரை) மதிப்பியல் ஆசிரியராக விளங்கிப் பணியாற்றும் அரும் பெரும் வாய்ப்புக் கிடைத்தது.

ந.ரா. முருகவேள்

உ

சிவமயம்

சென்னைச் சைவசித்தாந்த மகாசமாசத் தலைவர்

சைவப்பெரியார்

## திரு. ச. சச்சிதானந்தம்பிள்ளை அவர்கள் எண்பதாண்டு நிறைவு விழா

நன்னாளில் (27—8—67) வழங்கிய

# பாராட்டுரை வாழ்த்திதழ்

செந்தமிழும் இந்துமதச் செந்நெறியும்
பரப்பிமிகச் சிறக்கச் செய்யும்
உந்துபெருங் குறிக்கோளே உயர்நிலையா
வகுத்துக்கொண் டுழைக்க கிற்போய் !
சந்தமுயர் புகழ்ச்**சச்சி தானந்தப்**
பெருந்தகையாம் சான்றோய்! நீதான்
நந்தம்அரும் அப்பரைப்போல் நயக்களண்பான்
ஆண்டுற்றாய்! நலமே வாழி! 1

**பாம்பன்**எனும் பதியுதித்த பண்புமிகும்
**அடிகளார்** பரிவிற் செய்த
தீம்பனுவல் பலஆய்ந்து, சிறக்கமிகப்
பதிப்பித்த செம்மால்! நின்போல்
தேம்பலவும் மிகப்போற்றச், சிவத்தொண்டே
வாழ்வினுயர் சிறந்த நோக்காத்,
தாம்கொண்டார் எவர்?**சச்சி தானந்தம்**
**பிள்ளை**எனும் சான்றோய்! வாழ்க! 2

தெள்ளுதமிழ்த் **திரு. வி. க.** உயிர்நண்ப!
அவர்நினைவுச் சின்னம் கண்டோய்;
வெள்ளையர்ஆட் சியிலேயே, கல்விநெறித்
துறையதனில், மாட்சி மிக்க
நல்லபெரும் பதவிகளில் நனிதிகழ்ந்தோய்;
**'நற்சைவப் பெரியார்'** என்னும்
எல்லையில்சீர் பெற்றொளிர்வோய்; நின்பெருமை
எலாம்எம்மால் இயம்பற் காமோ? 3

கல்வியறிவு ஒழுக்கமுதற் கட்டுரைக்கும்
நலங்களெலாம் கவினப் பெற்றுப்
பல்வகையிற் சிறந்தோங்கும் பண்புடையீர்!
நல்லசிவப் பணியே என்றும்
ஒல்வகையில் இடைவிடா துஞற்றுதலே
வாழ்க்கைஎனக் கொண்டு யர்ந்தீர்!
நல்லநுமைப் பாராட்டி, நாங்கள்மிக
மகிழ்கின்றோம்! நலமே வாழ்க! 4

மெச்சுபல நலம்நிறைந்தோய்! மேதக்கோய்!
மிகச்சிறந்தோய்! விழுப்பம் மிக்கோய்!
நற்சைவப் பெருந்தகையோய்! நாடறிந்த
கல்விநிலைத் தலைவ! நல்லோய்!
***சச்சிதா னந்தப்பேர்ச் சான்றோய்!*** நம்
சிவநெறிக் கும், தமிழ் மொழிக்கும்
பொற்புமிகப் பலதொண்டும் பொருந்தமிகப்
பலஆண்டாய்ப் புரிவோய்! வாழ்க! 5

சிறந்துயர்ந்த பெருந்தகையோய்! ***சிவசமயப்
பாதிரி***யாம் சிறப்பே பெற்றோய்!
திறந்தெரிந்த நற்**சைவ சித்தாந்த
சமாசத்தின் தலைவ**! செம்மால்!

அறந்தருகட் டளைகள்இரண்டு அன்புமிகச்
சமாசத்திற்கு அமைத்துவைத்தோய்!
நிறைந்துனது நூற்றாண்டு விழாவும்,யாம்
கொண்டாட நெடிது வாழ்க! 6

'எந்நிலையில் நின்றாலும் எக்கோலம்
கொண்டாலும், எதுநேர்ந் தாலும்,
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை
பொருள்'என்றே மனத்திற் கொண்டு,
முன்னிமிக இளமைமுதல் முயன்றுமிகச்
சிவத்தொண்டின் முதிர்ந்து நிற்பீர்!
நன்னருமை வியந்துவந்து நாங்கள்மிகப்
போற்றுகின்றோம்! நன்று வாழ்க! 7

அன்பருளின் இன்புருவே! அறிவாற்றல்
நலங்களெலாம் அமைந்த தோன்றால்!
என்புரிவாய்? யாண்டிருப்பாய்? என்றாலும்,
சிவத்தொண்டே இயற்றும் நல்லோய்!
மன்பெரிதும் இறையுணர்வை மக்களிடைப்
பரப்பிவரும் மாட்சி மிக்கோய்!
நின்பெருமை யாம்அளக்கும் நீர்மைத்தோ?
நல்மிகநீ நெடுநாள் வாழ்க! 8

மாசுமறு இல்லாத வாய்மைமிகும்
ஒழுக்கத்தோய்! மாண்பின் மிக்கோய்!
தேசுயர்ந்து பொலிவுதரும் "**சிவசின்னம்
அணிவதேன்?**" எனும்சி றந்த
ஆசறுநற் சிறுநூலை அருமைமிக
வரைந்தளித்தோய்! ஆர்வம் ஓங்கப்
பேசுமெல்லாம் நல்லசிவப் பேச்சாகப்
பேசுகிற்போய்! பெரியோய்! வாழ்க! 9

(வேறு)

உண்மைப் பெரியோய்! ஒழுக்கமிக்கோய்
உயர்ந்த குறிக்கோள் வாழ்க்கையினோய்!
நண்ணி **வார வழிபாடு**
நாடு முழுதும் நடத்துவித்தோய்!
திண்மைச் **சச்சி தானந்தச்**
சிறந்த நல்ல பெருந்தகையோய்!
அண்மை **எண்பான் ஆண்டுநிறைவு**
அடைந்தோய்! வாழி நீடுழி!

(வெண்பா)

வாழி**சச்சி தானந்தச் சான்றோர்**, வளர்ந்தோங்கி
வாழி அவர்தொண்டும் மாண்புகளும்!-வாழியரோ
நங்கள்**சைவ சித்தாந்த நற்சமா சம்**, புகழோடு
எங்கும் பரவி இனிது!

திருமயிலை,
சென்னை-4

**ந. ரா. முருகவேள்**
(27—8—67)



# "பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்"

*முன்னுரை*

"பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்" என்னும் தொடர், மணிவாசகப் பெருமானைக் குறிக்கும். இத்தொடர், "செய்யா கூறிக் கிளத்தல் எய்யாதாகின்று எம் சிறு செந்நாவே" என்னும் புறநானூற்றையும், நவில் தொறும் நூல் நயம் போலும்" என்னும் திருக்குறளையும் நினைப்பூட்டுகின்றது. இனிய இத்தொடரினை அமைத்து, வழங்கி மகிழ்ந்தவர், தமது இளம் பருவத்திலேயே செந்தமிழ்ப் பெருங்கடவுளாம் திருச்செந்தூர் முருகப் பெருமானின் திருவருள் பெற்றுக் கந்தர் கலி வெண்பா மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் - முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் முதலிய அரும்பெரும் நூல்கள் பல வற்றை ஆக்கியளித்த அருட்பெருங்குரவராம் குமரகுருபர அடிகளார் ஆவர். 'சிதம்பர மும்முனிகோவை' என்னும் நூலில், குமர குருபர அடிகளார் மணிவாசகப் பெருமானை, இத்தொடராற் குறிப்பிடுகின்றார்.

"கடங்கலுழ் கலுழிக் களிநல் யானை
மடங்கலந் துப்பின் மானவேல் வழுதிக்கு
இருநிலம் அகழ்ந்தும் எண்ணில்பல் காலம்
ஒருவன் காணாது ஒளிந்திருந் தோயை,
வனசப் புத்தேள் மணிநாப் பந்திக்
கவனவாம் புரவியிற் காட்டிக் கொடுத்துப்
**பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்,**

ஐந்திணை உறுப்பின் நாற்பொருள் பயக்கும்
காமம் சான்ற ஞானப் பனுவற்குப்
பொருள் எனச் சுட்டிய ஒரு பெருஞ்செல்வ..',

**பாடலின் பொருள்**

''மதநீர் வெள்ளம்போற் பெருகுகின்ற யானைப்படைகளையும், ஆண்சிங்கம் போன்ற வலிமையையும், பெருமை மிக்க வேற்படையையும் உடையவன், அரிமர்த்தன பாண்டியன். அவனுக்கு, திருமால் எத்துணையோ பல காலம் இருநிலம் அகழ்ந்து சென்று முயன்றும் பார்த்தும் காணமுடியாத சிவபெருமானைக் காணுமாறு காட்டியருளியவர், மாணிக்கவாசகர். சிவபெருமான் மாணிக்கவாசகர் பொருட்டுப் பிரம தேவனின் திருவாய் ஆகிய பந்தி (Stable) யில் தங்கி உறையும் வேதமாகிய, குதிரையின் மீது எழுந்தருளிப் போந்தார்; நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்தார்! பெரியதென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றினார்! இவையெல்லாம் நிகழ்தற்குக் காரணராக விளங்கிய மணிவாசகர், சிறந்த செந்நாப் புலவர்; பைந்தமிழ் நவின்றவர்; முல்லைகுறிஞ்சி பாலை மருதம் நெய்தல் என்னும் ஐந்து திணைகளையும் உறுப்பாகக் உறுப்பாகக் கொண்டு: அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்கு உறுதிப் பொருள்களையும் பயக்கின்ற, காமம் சான்ற ஞானப்பனுவேல் ஆகிய (திருவாசகம்) திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் இரு பெரு நூல்களுக்கும், இவரே பொருளாவார் என்று, தில்லைவாழ் அந்தணர்களுக்குச் சுட்டிக் காட்டியவர் மாணிக்க வாசகர். இங்ஙனம் மாணிக்கவாசகரால் சுட்டிக் காட்டி உணர்த்தப்பெற்ற ஒப்புயர்வற்ற பெருஞ்செல்வர் ஆகிய நடராசப் பெருமானே...'' என்பது, மேற்குறித்த சிதம்பர மும்முனிக் கோவைப் பாடற்பகுதியின் திரண்ட பொருள் ஆகும்.

### மணிவாசகர் மாட்சி

இப்பாடலின்கண் மணிவாசகப் பெருமானைக் குமர குருபர அடிகளார், இருபெருஞ் சிறப்புகளுக்கு உரியவராகக் குறிப்பிட்டுச் சிறப்பித்துரைத்துப் புகழ்கின்றார். மணிவாசகரைப் பொதுவாக அடியவர் - பக்தர் - அன்பர் என்றே பலரும் கருதுவர். மணிவாசகர் ஒருபெரும் பக்தர்-அடியவர்-அன்பர் மட்டும் அல்லர்; அவர் ஒரு பெரும் புலவர்; அதுவும் சிறந்த ஒரு 'செந்நாப் புலவர்' என்று நமக்கு அறிமுகம் செய்து வைத்தருள்கின்றார், குமரகுருபரர்! அம்மட்டோ! நம் தமிழ்மொழி எத்துணையோ நெடுங்காலமாக நின்று நிலவி விளங்கி வருகின்றது. சங்ககாலத்தில் இலக்கண இலக்கிய வளங்கள் நிரம்பி, அது 'செந்தமிழ்' என விளங்கி வந்தது. கபிலர் பரணர் நக்கீரர் போன்ற கற்றோர்கள் பலர், அதனைப்போற்றிக் காத்து வளர்த்து வந்தனர். அத்தகைய செந்தமிழ் மொழியினைக் கற்றோர் மட்டுமேயன்றி, மற்றமுள்ள எல்லோருமே, கசிந்து கண்ணீர் மல்கிக் காதலித்துப் போற்றிப் பாடி மகிழும் வண்ணம் 'பைந்தமிழ்' எனவும் ஆக்கியருளினார் மாணிக்கவாசகர். இங்ஙனம் சங்க காலத்துச் செந்தமிழ், தெய்விகச் சிறப்பு நலம் திகழ்ந்தோங்கப்பெற்று, 'பைந்தமிழ்' எனவும் அமைந்து பரவி வளர்ந்தோங்கச் செய்தருளியவர், நம் அருமை மாணிக்க வாசகப் பெருமானே, என்று நமக்குத் தெருட்டியருள்கின்றார், குமரகுருபரர்,

### செந்நாப் புலவர்

சிறந்த புலவர் ஒருவரின் புலமை நலனை, அறிந்து உணர்தற்குப் பலவகை அளவுகோல்கள் உண்டு. அவற்றுள் மூன்று, மிகவும் முதன்மை வாய்ந்தனவாகும். (1) அவர் இயற்றியுள்ள நூல்கள். (2) அவர் பயின்றுள்ள பற்பல நூல்கள் (3) பிற பெரும் புலவர்கள் அவரை மதித்துப் போற்றும் திறம். இம மூன்றினாலும் மணிவாசகர்

ஒரு சிறந்த செந்நாப்புலவர் என்பதனை இங்கு ஓரள வேனும் இயலும் வகையில் ஆராய்ந்து உய்த்துணர முயலுதல், நமக்குப் பல்லாற்றானும் நலம் பயப்பதாகும். எனினும் மூன்றாவதாகிய அளவுகோல் கொண்டு, மணி வாசகப்பெருமானின் மாட்சிமையினைப் பிற்போந்த சான்றோர்கள் அனைவரும், எங்ஙனமெல்லாம் புகழ்ந்து போற்றி மகிழ்ந்து பணிந்துள்ளனர் என்பதுபற்றி மட்டும் ஈண்டு ஒரு சிறிது இயன்ற வரையில் காண்போம்.

### (1) பாம்பன் அடிகளார்

''இலக்கியங்களில் எப்போதுமே சொற்களின் ஓர் எதிரொலி இருந்து கொண்டேயிருக்கின்றது; தன்னுடைய அடிமனத்தில் இருந்து, ஒரு புலவர், மற்றொரு புலவரை, ஒருவகை உள்ளெழுச்சியாலும்; நியாயமான கருத்துக் கள வினாலும், எதிரொலிக்கின்றார். இலக்கியங்களில், கருத் துக்களை வெளியிடும் ஒருவகை முறையானது, ஓர் அளவுக்கு மொழியின் மரபு நெறிகள் போல, அனைவருக் கும் உரிய பொதுச் சொத்து ஆகின்றது. மேற்கோளாகக் கையாளுதல் என்பது, ஓர் ஆசிரியருக்குச் செய்யப்பெறும் ஒரு பெருஞ் சிறப்பு ஆகும்'' (1) *

ஆதலின், மணிவாசகரின் பாடற்பகுதிகளைப் பிற சான்றோர்கள் பொன்னே போற்போற்றித் தம் நூல்களி லும் பாடல்களிலும் பொதிந்து கொண்டுள்ள திறத்தி னால்,மணிவாசகரின் செந்நாப்புலமையினையும் பிறசிறப் பியல்புகளையும், நாம் செவ்விதின் அறிந்து மகிழ்ந்து பயன்பெறலாம்.

நமக்கு அண்மைக்காலத்தில் வாழ்ந்திருந்த நல்லருட் பெருஞ்சான்றோர்கள் பற்பலருள், பாம்பன் அடிகளார் தலைசிறந்தவர். குமாரசுவாமியம் தகராலயரகசியம், பரிபூரணானந்தபோதம், திருப்பா, திருவலங்கல்திரட்டு, என்பனபோன்ற பல அரிய பெரிய நூல்களை அருளிச் செய்தவர், பாம்பன் அடிகளார்,

(1) மணிவாசகர்பாற் பாம்பன் அடிகளார் கொண்டிருந்த பக்திமையும், மதிப்பும் எல்லையற்றவை. ''கீதம் இனிய குயிலே கேட்டியேல், எங்கள் பெருமான் பாதம் இரண்டும் வினவில், பாதாளம் ஏழினுக்கு அப்பால்; சோதி மணி முடி சொல்லில், சொல்லிறந்து நின்ற தொன்மை; ஆதிகுணம் ஒன்றுமிலான்; அந்தம் இலான் வரக்கூவாய்'' *(346)* எனவரும் திருவாசகக் குயிற்பத்துத் திருப்பதிகப் பாடலினை,

''***திருவாத வூர்அடிகள்*** சொற்றவாறு, அடிசிரசு
செப்பொணா ஞான விண்ணாய்ச்
செறிநினக்கு, அடிவினவில் ஏழ்பாத லங்களும்
செலலான நிலையில் எனலாம்;
பொருள்ஒரு முடிவினவில், உரையிறந்திட மேய
புலம்ஆகும் நிலையில் எனலாம்...''

என்று, பாம்பன் அடிகளார் பாங்குறச் சுட்டி மேற்கோளாகக் காட்டிப் பாடியுள்ளார்.

(2) மணிவாசகர், தமது போற்றித் திருவகவலின்கண் வழங்கிய ''மிண்டிய ***மாயாவாதம்***'' என்னும் சொற்றொடர், பற்பல கருத்து நுட்பங்களுக்கு இடமாகத் திகழ்வது, அது, கவுடபாதர் சங்கரர் முதலியோரால் வகுக்கப்பட்ட ஏகான்மவாதக் கொள்கையினைச்சுட்டும் என்பர் ஒரு சாரார்; அற்றன்று, அது மணிவாசகரின் காலத்திற் பெரிதும் பரவியிருந்த பௌத்த மதக் கொள்கையினையே குறிக்கும் என்பர் பிறிதொருசாரார். ஆனால், அது பௌத்தத்திற்கும் மிக முற்பட்ட பண்டைய நிரீச்சுவரசாங்கியம் என்னும் கொள்கையினைக் குறிக்கும் என்று, ஆராய்ந்து கூறுவர் பாம்பன் அடிகளார்.

''மாணிக்க வாசகர் ***போற்றி***சொல் அகவலில்,
கோள்நிற்கும் ***மாயையின் வாதி***யைக் குறைகுயின்று,
ஆள்நட்பு மார்க்கம்இஃ தாம், எனக் காட்டிய
மாணத்தெள் ளாறு, எற்கும் வாய்த்ததுன்அருளே''

சொல்லும் ஆடும்; மென்மெல இயலும்:
கணைக்கால் நுணுகிய நுசுப்பின்,
மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே''
—தொல் களவியல் மேற்கோள்.

எனவரும் பழைய சங்ககாலப்பாடலைத் தழீஇ, மணிவாசகர் பின்வரும் கருத்தமையப் பாடுகின்றார்.

''ஓர் ஆடவன் அழகிய பெண்ணொருத்தியை ஒரு பொழிலிடைக் கண்டான். அன்பின் வயப்பட்டு இருவரும் இன்பம் பெருகத் தம்முட் புணர்ந்து மகிழ்ந்தனர். புணர்ச்சி நிகழ்ந்ததற்பின், இருவரும் பிரிய நேர்ந்தது. காதலியைப் பிரியுங்கால் காதலனின் உள்ளம் பெரிதும் வருந்தியது. பிரிந்த காதலி, தன் தோழியர் கூட்டத்தைச் சென்று சேர்ந்தாள். காதலன் மறுநாளும் அப்பொழிலின் கண் வந்து நின்றான். அன்றும் தன் காதலியை அங்குக் கண்டு, தான் அவளைப் புணர்தல் வேண்டும் என்று, அவன் மிகவும் விருப்பங்கொண்டிருந்தான். தன் காதலியை அவன் அங்குக் கண்டிலன். இனிச் சிறிது பொழுதில் வருவாள் என்ற எண்ணத்தோடு, நேற்றுத் தான் அவளைப் புணர்ந்து மகிழ்ந்த இன்பத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தான். அந்நிலையில் அவனுக்கு ஒருபுறம் மகிழ்ச்சியும், பிறிதொரு புறம் துன்பமும் உண்டாயின. காதலியின் பேரழகில் அவன்தன் மனத்தைப்பறிகொடுத்து விட்டிருந்தான். அவனது உள்ளக்கோயிலில் அப்பெண்ணின் வடிவம் நீங்காது நிலை பெற்றுவிட்டது. அவளது வருகைக்காக அவன் அங்கேயே நெடுநேரம் காத்துக் தவங்கிடந்தான். நெடும் பொழுது கழித்து, அவன் உள்ளத்தைக் கொள்ளைகொண்டுவிட்ட அவ் வஞ்சகக்கள்வி, அங்கு வந்து நின்றாள். தன் உயிரினும் இனிய காதலியைக் கண்டதும், அவன் அகமிகமகிழ்ந்து ''இதோ வந்து நின்றதென் மன்னுயிரே'' எனவாய் விட்டுக் கூறிப் பாராட்டிப் பெருங்களிப்புற்றான். ''உயிர் என வியத்தல்'' என்னும் அகத்துறைக்கு உரிய இச் செய்தியை,

''நேயத்த தாய், நென்னல் என்னைப்
    புணர்ந்து, நெஞ் சம்நெகப்போய்,
ஆயத்த தாய், அமிழ் தாய், அணங்
    காய், அரன் அம்பலம்போல்
தேயத்த தாய், என்றன் சிந்தைய
    தாய்த், தெரி யிற்பெரிதும்
மாயத்த தாகி, இதோ வந்து
    நின்றதென் மன்னுயிரே!''

என, ஏதோ ஒரு கதை கூறுவதுபோலக் கூறுகின்றார் நம் மாணிக்கவாசகர். அவர் கூறுவது உண்மையில் ஒருகதையும் அன்று தமது உயிர்க்குயிராகிய சிவம் தம்மாட்டுப் பலவகைத் திருவிளையாடல்கள் நிகழ்த்தி, ''இதோ வந்து நின்றதென் மன்னுயிரே'' எனலாம்படி, பின்னர்த் தமக்குக் காட்சி நல்கிய சிறப்பினையே, அவர் இங்ஙனம் குறிப்பிடுகின்றார்! இவ்வுண்மை, பின்வரும் பேராசிரியர் உரையால் செவ்விதின் அறியப்பெறும்.

**''என்மாட்டு அருளுடையதாய், முற்காலத்து என்னை வந்து கூடி, அருள் இல்லது போல் நெஞ்சம் உடையும் வண்ணம்போய்த் தன் மெய்யடியார் குழாத்ததாய், நினைக்குந்தோறும் அமிழ்தம் போல இன்பம் செய்து, கட்புலனாகாமையில் துன்பம் செய்து அம்பலம் போலும் நல்ல தேசங்களின் கண்ணதாய் வந்து, என் மனத்தகத்ததாய், இத்தன்மைத்தாகலின் பெரிதும் மாயத்தை உடையதாய், எனது நிலைபெறும் உயிர், இதோஇங்கு வந்து தோன்றுகின்றது'' என்று, வேறும் ஒரு (திருவாசக அனுபவப்) பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க.**

**(2) புனல்தரு புணர்ச்சி :**

ஒரு தலைமகன் ஒரு தலைமகளைக் காதலித்தான். அக் காதல் விருப்பம் நிறைவேறத் தோழியின் துணையை நாடினான். அவளும் அவனது வேண்டுகோளுக்கு இசைந்தாள். இசைந்த தோழி, தலைமகள்பாற் சென்று,

தலைமகளின் அயரா அன்பின் திறனைப் பெரிதெடுத்துக் கூறி, அவனை ஏற்றுக்கொள்ளல் இன்றியமையாததெனத் தலைவியிடம் வற்புறுத்தி மொழிந்தாள். அதுகேட்ட தலைவியும், தான் முன்னொரு நாள் சுனைநீராடச் சென்றபோழ்து, அச்சுனை நீரின்கண் வழுக்கி விழுந்து இறக்க இருந்த நிலையில், அவ் வழியே தற்செயலாகப் போந்த தலைமகன், உடனே சுனையிடைப் பாய்ந்து, தன்னைக் காப்பாற்றிய அருஞ்செயலை நினைவு கூர்கின்றாள். அவன் காலத்தினால் செய்யாமற் செய்த அரிய பேருதவிக்கு நன்றி பாராட்டுகின்றாள். ''உற்றார்க் குரியர் பொற்றொடி மகளிர்'' என்னும் முதுமொழியை எண்ணுகின்றாள். அருவியிற் சென்று நீராடப் புகுந்த யான், சுனையில் வீழ்ந்து ஆழ்ந்து தத்தளித்து உயிரை இழக்க இருந்த நிலையில், அங்கு உற்றகாலத்தில் வந்து என் உயிரைக் காத்து உதவிய அப் பெருந்தகைக்கு, யான் சொல்லத்தக்க நன்றியுரை யாது? என்று எனக்குத் தெரிய வில்லை. ''அவர்க்கு அறியேன் சிறியேன் சொல்லும் வாசகமே'' என்று குறிப்பிட்டு, நன்றியுணர்வு காரணமாக அத் தலைவனையே தான் மணத்தல் வேண்டும் என்று, தன் மனத்தில் உறுதிப்பாடு செய்து உடன்படுகின்றாள். 'புனல்தரு புணர்ச்சி' என்று, நம் தமிழ் அகப்பொருள் இலக்கண நூல்கள் கூறும் துறையினைத் தழுவியதாகப் பின்வரும் அழகிய திருக்கோவையார் செய்யுளை, மணி வாசகர் அருளிச் செய்கின்றார்.

ஓங்கும் ஒருவிடம் உண்டு, அ:ம்பலத்து
 உம்பர் உய்ய, அன்று
தாங்கும் ஒருவன் தடவரை
 வாய்த், தழங் கும்அருவி
வீங்கும் சுனைப்புனல் வீழ்ந்த (அ)ன்று,
 அழுங்கப் பிடித்தெடுத்து
வாங்கும் அவர்க்(கு), அறியேன்
 சிறியேன் சொல்லும் வாசகமே!''

இப்பாடலில், தலைவி தலைவன் தன்னைச் சுனை யிலே வீழ்ந்து இறவாமல் காத்து உதவிய செயலை நினைவுகூர்ந்து நின்று, நன்றி பாராட்டியதாக மட்டும் கூறி, மணிவாசகர் அமைந்து விடவில்லை.

''தனியனேன் பெரும்பிறவிப் பவ்வத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு, பற்றொன்றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னும் காலால்
கலக்குண்டு, காமவான் சுறவின் வாய்ப்பட்(டு)
இனிஎன்னே உய்யுமா(று) என்றென் றெண்ணி,
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை,
முனைவனே முதல்அந்தம் இல்லா மல்லற்
கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே?''

என்று தாம் திருவாசகத்திற் பாடியவாறுபோல, சிவ பெருமான் தம்மைப் பிறவிப் பெருங்கடலில் விழுந்து அலைந்து வருந்தாமல், வாவா என்று வலித்துப் பிடித்து ஈர்த்துக்காத்து ஆண்டு கொண்டருளிய பேருதவியையும் நினைவு கூர்ந்து, அத்தகைய சிவபெருமானுக்கு என்ன நன்றியுரை கூறுவது? யாங்ஙனம் கூறுவது? என்று யான் அறிகின்றிலேன் என்னும் தம் கருத்தும் உடன் இயைந்து, அமைய ''அறியேன் சிறியேன் சொல்லும் வாசகமே' எனப்பாடிப் பரவுகின்றார். இவ்வுண்மை பின்வரும் பேராசிரியர் உரையால் தெள்ளிதிற் புலனாகும்.

**''பிறவிக் கடலில் யான் விழுந்து கெடப்புகத் தாமே வந்து பிடித்தெடுத்து, அதனினின்றும் வாங்கிப் பேருதவி புரிந்த கூத்தப்பெருமானுக்குச் சிறியேன் ஆகிய யான் சொல்லுவது அறியேன் என்று வேறும் ஒரு பொருள் தோன்றியவாறு கண்டு கொள்க.''**

**இன்பக் கலவிகள் :**

இம்மட்டோ! தலைவன் வரைபொருள் தேடிவரப் பிரிந்து செல்கின்றான். அவனோ விரைவில் குறித்த காலத்தில் வருகின்றிலன். அவன் குறித்த காலமும் கடந்து

விட்டது. ஆனால் அவன் வரவும் இல்லை, தலைவிக்குத் தன்னைப் பற்றிய செய்தி ஏதும் தெரிவிக்கவும் இல்லை. அந்நிலையில், பிரிந்து சென்ற பிற கணவன்மார்கள் மட்டும், தத்தம் மனைவியர்க்கு அவ்வப்போது தம் செய்திகளைத் தெரிவித்துத் தூதுகள் விடுகின்றனர். அங்ஙனம் அயலவர்கள் விடுக்கும் தூதுவர்கள்மட்டும், அவரவர் இல்லத்திற்கு வருவதும் செல்வதுமாக இருக்கின்றனர். அவ்வாறு தான் வாராதொழியினும், அத்தகையதொரு தூதினையேனும் தலைவன் தனது தலைவிக்கு விடுத்திருக்கலாம். அவன் அங்ஙனமும் செய்திலன். அதனால் தலைவி ஆற்றாமை மிக்கு அலக்கணுறுகின்றாள். ''முன்னே என் உள்ளம் உருகி மகிழ, அவர் என்பால் இன்பக் கலவிகள் செய்தார். என் உயிரைத் தாம் கொண்டு சென்று, தம் உருவத்தை என் நெஞ்சில் இருத்தி வைத்தார். அத்தகைய காதலர் நம்மை விட்டு நீங்கி இத்துணை நெடுங்காலம் ஆகியும், இதுகாறும் ஒரு தூதினையேனும் அனுப்பாமல் வாளாது இருப்பது என்கருதியோ?'' என்று தலைவி உள்ளம் கவல்கின்றாள். ''தூது கண்டு அழுங்கல்'' என்னும் இவ் அகத்துறைக் கருத்தினை,

''மலங்கினேன் கண்ணின் நீரை மாற்றி,
மலங்கெடுத்த பெருந்துறை
விலங்கினேன், வினைக்கேடனேன்; இனி
மேல்விளைவது அறிந்திலேன்;
இலங்குகின்ற நின்சேவடிகள் இரண்டும்
வைப்பிடம் இன்றியே,
கலங்கினேன்; கலங்காமலே வந்து
காட்டினாய் கழுக்குன்றிலே''

—திருவாசகம், 468

எனவரும் திருக்கழுக்குன்றத் திருப்பதிகத் திருவாசகப் பாடலின் கருத்தும் உணர்வும் கலந்து அமைந்து விளங்கத் தக்க நிலையில்,

''வருவன செல்வன தூதுகள்
ஏதில; வான்புலியூர்
ஒருவன(து) அன்பரின், இன்பக்
கலவிகள் உள்ளுருகத்
தருவன செய்(து), என(து) ஆவிகொண்டு
ஏகி, என் நெஞ்சில்தம்மை
இருவின காதலர் ஏதுசெய்வான்
இன்று இருக்கின்றதே!''

—திருக்கோவையார், 281

என்று நம் மணிமொழியார் அணிதிகழப்பாடுகின்றார். இப்பாடலில், தலைவ்னைப் பிரிந்து வருந்தும் தலைவியின் ஆற்றாமையை மட்டும் அடிகள் கூறுகின்றலர். 'தன் மெய்யன்பர்களைப் போல யானும்இன்புறுமாறு சிவபெருமான் என்பால், உள்ளம் உருகும் இன்பக் கலவிகளை முன்பு செய்தருளினார். பின்னர் என் உயிர் போயினாற் போல என்னை விட்டுத் தான்பிரிந்து போயினார். போயின பின்னர், ஒரு ஞான்றும் அவர் எனக்குக் கட்புலனாகாமல் மறைந்து நின்றார். அதனால் தம்மை நினைந்து யான் இடையறாது வருந்துமாறு செய்தார். அத்தகைய என் ஆருயிர்க் காதலராகிய சிறபெருமான், இனி என்பால் ஏது செய்ய இருக்கின்றாரோ? நன்றே செயினும் பிழைசெயினும் நானோ இதற்கு நாயகம்?" என்னும் வேறொரு பொருளும், இப்பாடற்கண் அமைந்துள்ள தன்மை, அனைவரும் அறிந்து இன்புறற் பாலது. இதனைப் பின்வரும் பேராசிரியர் உரையால் யாவரும் இனிது தெளிந்து மகிழலாம்;

**''தன் மெய்யன்பர்போல யானும் இன்புற, உள்ளம் உருகும் இன்பக் கலவிகளை முன்பு என்பாற்செய்து, பின்பு எனது ஆவி நீங்கிப்போயினாற்போலத் தாம்பிரிந்துபோய், பின்னர் ஒரு ஞான்றும் என் கட்புலனாகாமல், யான் நினைந்து வருந்தும்படி செய்த காதலர் (சிவபெருமான்), இன்று ஏது செய்ய இருக்கின்றாரோ! என்று வேறும் ஒரு பொருள் தோன்றியவாறு கண்டு கொள்க.''**

**பெண்ணமிழ்தம் :**

இனி இவ்வாறே, ''ஊடல் நீட வாடி உரைத்தல்', என்னும் அகக்துறை அமைந்த பிறிதொரு செய்யுளையும் ஈண்டுக் குறிப்பிடுதல் பொருத்தமாகும். ஊடுதல் காமத் திற்கு இன்பம் ஆதலின், தலைமகள் ஊடல் கொள் கின்றாள். ஆயின், அவள் ''உப்பமைந்தற்றாற் புலவி'' என்னும் நுட்பம் அறியாமையால், அறிந்திருந்தும் மறந்தமையால், தலைமகன் தன் ஊடலைத் தணிக்கவும் தணியாது, மேன்மேலும் ஊடி நிற்கின்றாள். ''உணர்ப்பு வரை இறப்பினுப், செய்குறி பிழைப்பினும், புலத்தலும் ஊடலும் கிழவோற்கு உரிய'' ஆதலின், தலைமகனும் அவள்பாற் புலந்து ஊடல் கொள்ளத் தலைப்படுகிறான். ''அன்று அம்மலையிடத்தே தன்னை எய்துதற்கு உரியவா யில்ஒன்றும் இன்றி வருந்திநின்ற, யான் உய்யும்வண்ணம் தனது இணைமலர் போன்ற எழில் மிக்க கண்களின் இனிய நோக்கத்தினைத் தந்தருளி, என்னைத் தன்வயம் ஆக்கிய 'பெண்ணமிழ்தம்' தானா இவள்? இவள் அவளின் வேறாய வேறு ஏதோவொரு மாய வடிவினளே ஆதல்வேண்டும். இல்லையாயின், நாம் இத்துணைப் பணிமொழிகள் கிளந்து இரந்து நின்றும், இவள்தன் ஊடல் தீர்ந்திலாமைக்குக் காரணம் என்னை?'' எனத் தானும், தன் ஊடலால் சிறிது சினந்தாற்போல வெறுப்புணர்வுதோன்றக் கூறுகின்றான். இதனை,

''திருந்தேன் உயநின்ற சிற்றம்
பலவர், தென் அம்பொதியில்,
இருந்தேன் உயவந்து, இணைமலர்க்
கண்ணின் இன்நோக்கு அருளிப்,
பெருந்தேன் எனநெஞ்சு உகப்பிடித்து
ஆண்டநம் பெண்ணமிழ்தம்,
வருந்தேல்! அதுவன்று; இதுவோ,
வருவதுஓர் வஞ்சனையே''

—திருக்கோவையார், 394

என்று, சொற்பொருட் சுவைநலங்கள் பெருக, மாணிக்க வாசகர் பாடுகின்றார். இப்பாடலின் கண்ணும் அவர் தம்மை ஆட்கொண்ட இறைவனின் அருட்டிறத்தை ஓராற்றால் இணைத்து இயைத்துக் கூறியிருக்கும் முறை, அறிஞர்களுக்கு ஆராப் பெருவிருந்து ஆகற்பாலது. இதன்கண்,

''தோலும் துகிலும்
குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும்
பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க
வளையும் உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக்
குளிர்ந்து, ஊதாய் கோத்தும்பீ''

—திருவாசகம், 232

என்று திருவாசகம் திருக்கோத்தும்பித் திருப்பதிகத்தின் கண், தாம் 'தொன்மைக் கோலம்' என்று சுட்டிக் குறிப்பிட்டுச் சிறப்பித்துப் பாடிய அம்மையப்பர் (அர்த்த நாரீசுவர்)* வடிவத்தினை நினைவுகூர்ந்து, அதனை நம்ம னோர்க்கு உணர்த்தும் வகையில், அருளிச் செய்திருக்கும் முறை அறிந்துணர்ந்து இன்புறுதற்குரியது.

''சிவபெருமானை நோக்கி யாதொரு முயற்சியும் செய்யாமலே, ஒருவாற்றானும் திருந்தாத யான் இருந்

---

* ''Plato held that in the beginning man and woman were one inseparable entity and that, being divided by the wrath of the gods into two, they are longing for union again. This view is analogous to the Indian mythological representation of Siva, as a form of half-man and half woman, 'Umai Oru pakan' or 'Arthanareeswaran'.''

—Dr. V. Sp. Manickam,
The Tamil Concept of Love, p. 28,

தேன்; ஆனால் அவனோ, என்னைப் பிறவித் துன்பத் தினின்று உய்விக்கத், தானே எளிவந்தான்; எனக்குத் தனது இணைமலர்க் கண்ணின் இனிய நோக்கத்தினை வழங்கியருளினான்; பெருந்தேனைப் போன்று இனிமை மிக்குத் திகழ்ந்தான்; என்னுடைய கல்மனமும் கரைந் துருகும்படியாக, என்னை வலிந்து பிடித்து ஆட்கொண் டருளினான்; எளியேனை அடிமைகொண்ட அச் சிவ பெருமான் மாதியலும் பாதியனாய்ப் பெண்ணொடு கூடியவன்; அம்மையப்பன் எனத் திகழ்பவன்; அமிழ்தம் போல்பவன்'' என்னும் பிறிதொரு குறிப்புப் பொருளும், மேற்சுட்டிய திருக்கோவையார் பாடலின்கண் கலந் துறைந்து நிற்றல், கவிதைநலம் உணரவல்லார்க்கெல்லாம் கழிபெருஞ் சுவை பயப்பதாகும். பின்வரும் பேராசிரியர் உரை, இதனைப் பெரிதும் வலியுறுத்தும்.

**''தன்னை நோக்கி ஒரு முயற்சியும் இல்லாத யான், பிறவித் துன்பத்தினின்று பிழைக்கும்படி, தானே அருளுடன் எளிவந்து தன் இணைமலர்க் கண்ணினது இனிய கடைக்கண் நோக்கத்தைத் தந்து, பெருந்தேன் போன்று இனியதாய், என் கல்மனமும் நெகிழ என்னை வலிந்து பிடித்து அடிமைகொண்ட பெண்ணமிழ்தம் என வேறும் ஒரு பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க.''**

**திருக்கோவையாரில் திருவாசகம் :**

திருவாசகத்தின் அரிய இனிய கருத்துக்களும், அழகிய சொல்-சொற்பொருள்-சொற்றொடர் அமைப்புக்களும், திருக்கோவையாரின்கண் ஆங்காங்கே விரவிப் பரவி வருவதனை விளக்குவதற்கு, இன்னும் எத்தனையோ பற்பல சான்றுகளைக் காட்டுதல் கூடும்! ஆயினும், இடச் சுருக்கம் கருதி, இரண்டொன்றை மட்டும் இங்குக் குறித்தல் சாலும்.

''மின்னிடைச் செந்துவர்வாய்க் கருங்கண்
வெண்ணகைப் பண்ணமர் மென்மொழியீர்!
என்னுடை யாரமு தெங்களப்பன்
எம்பெரு மானிம வான்மகட்குத்

தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன்
தமையனெம் மையன் தாள்கள்பாடிப்
பொன்னுடைப் பூண்முலை மங்கைநல்லீர்
பொற்றிருச் சுண்ணம் இடித்தும்நாமே''

எனவரும் திருவாசகப் பாடலின் அழகின் கருத்தினைத் தழுவி,

''தவளத்த நீறணி யும்தடந்
தோள் அண்ணல், தன் ஒருபால்
அவள்அத்த னாம்;மக னாம்;தில்லையான்
அன்று உரித்தது அன்ன
கவளத்த யானை கடிந்தார்
கரத்த, கண்ணார் தழையும்,
துவளத் தருவனவோ? சுரும்பார்
குழல் தூமொழியே''

எனவரும் திருக்கோவையார் பாடல் அமைந்திருத்தல், பேராசிரியரின் உரைத்துணைக் கொண்டு உணர்ந்து இன்புறலாம். இங்ஙனமே.

''அருளா தொழிந்தால் அடியேனை
அஞ்சேல் என்பார் ஆரிங்குப்
பொருளா என்னைப் புகுந்தாண்ட
பொன்னே பொன்னம் பலக்கூத்தா,
மருளார் மனத்தோ டுனைப் பிரிந்து
வருந்து வேனை, வாவென்றுன்
தெருளார் கூட்டங் காட்டாயேல்
செத்தே போனாற் சிரியாரேரா?''

எனவரும் கோயில் மூத்த திருப்பதிகத் திருவாசகப் பாடல்,

''பொருளா எனைப்புகுந் தாண்டு
புரந்தரன் மால்அயன்பால்
இருளாய் இருக்கும் ஒளிநின்ற
சிற்றம் பலம்எனலாம்

சுருளார் கருங்குழல் வெண்நகைச்
செவ்வாய்த் துடிஇடையீர்!
அருளாது ஒழியின், ஒழியாது
அழியும்என் ஆருயிரே''

எனவரும் திருச்சிற்றம்பலக் கோவையார் செய்யுளோடு பெரிதொத்து நின்று திகழ்தல், இவ்விரண்டினையும் ஒப்பிட்டு உணர வல்லார்க்குச் செவ்விதின் விளங்கும்.

**தேனில் விளைந்த தெள்ளமிழ்தம்:**

இங்ஙனமெல்லாம், திருக்கோவையாரின்கண் மாணிக்கவாசகப்பெருமான் ''இல்லது இனியது நல்லது'' என்று புலவர்களால் நாட்டப்பெற்ற ''புலநெறி வழக்கம்'' தழீஇய கருத்துக்களையே பாடுகின்றனராயினும், திருவாசகத்தின்கண் தாம் வெளியிட்டருளிய சிவானுபவ நலத் திறங்களையும், இடையிடையே விரவ விட்டு, ஐம்பொறி வயப்பட்ட இழிந்த காம இன்பச் சுவை ஒன்றுமேயறிந்த உலகியன் மக்கட்கு, ஐம்பொறி அளவிற் புலப்படாமல், மேற்பட்டொளிரும் மெய்யுணர் வின்ப அனுபவ நலத்தினை அறிவுறுத்தருளி, நலம் புரிந்துதவும் அருமைப்பாடு, வேண்டுந்தனையும் விரித் துரைத்து விரும்பிப் புகழ்ந்து போற்றி மகிழ்ந்து இன்புறு தற்குரியதாகும்! தேன் அனைய திருவாசகத்தின்கண் வெளிப்போதரும் சிவானுபவ நலத் திறங்கள், இடை யிடையே விரவ இனிதமைந்து இயன்றுள்ள சிறப்பினைத் திறன் தெரிந்து குறித்துப் பாராட்டுதற்கே, திருக்கோவை யார் ''தேனூறு செஞ்சொல் திருக்கோவை'' என்றும், ''தேனில் விளைந்த தெள்ளமிழ்தம்'' என்றும் விதந்து புகழ்ந்து போற்றிப் பாராட்டப்படுவதாயிற்று.

**முடிவுரை :**

உலகியற்கைப் பொருள்களில் கூர்தலறக் கொள்கை யின்படி, முதன்முதலாகத் தோன்றிய பொருள்களைவிட நாளடைவாகப் படிப்படியே பின்னர்த் தோன்றும்

பொருள்களே மேன்மேல் உயர்ந்து ஓங்கி, வளர்ச்சியுற்றுச் சிறந்து திகழக் காண்கின்றோம். ஆனால் பரிணாமம் எனப்படும் இக்கூர்தலறக் கொள்கையானது. இலக்கியங் களைப் பொறுத்தவரையில் சிறிதும் பொருந்துவதாகத் தோன்றவில்லை. மிகச் சிறந்த பேரிலக்கியங்கள் எல்லாம் துடுமெனத் தாமே முதன்முதலாகத் தோன்றுகின்றன. ஒரே ஒரு முறை மட்டுமே தோன்றும் அச்சிறப்பிலக்கி யங்களுக்கு அருகே நிற்பதற்குக்கூட, அவற்றிற்குப் பின்னர்ப் படிப்படியே காலப்போக்கில் தோன்றும் இலக் கியங்கள் தகுதி பெறுவதில்லை''† என்று புகழ்மிக்க மேலைநாட்டு இலக்கிய ஆராய்ச்சிப் பேரறிஞர் ஐ. எ. ரிச்சர்ட்சு, தம்முடைய இலக்கியத் திறனாய்வு நூலின்கண் நெடிது ஆராய்ந்து உணர்ந்து குறிப்பிட்டுரைக்கின்றார். அவர்தம் கூற்று, நம்முடைய திருக்கோவையாருக்குப் பொருந்தியதொன்றாகக் காணப்படுகின்றது.

இன்று தமிழில் எத்துணையோ பலப்பல கோவை நூல்கள் பாடப்பெற்றிருக்கின்றன எனினும் எல்லாவற் றுள்ளும், தெய்விக அருட் சிறப்புநலம் அமைந்து, தனிப் பெரு முதன்மையும் மாட்சிமையும் மிக்குத் தன்னிகரற்றுத் திகழ்வது திருக்கோவையாரேயாகும். இன்றுள்ள எல்லாக் கோவை நூல்களுக்கும் முற்பட்டு, முதன்முதலில் தோன்றி ஏனைய பிறவற்றிற்கெல்லாம் அடிப்படையாய் - வழி

---

†' Here is a very odd thing. In literature the best in each kind comes first, comes suddenly and never comes again. This is a disturbing, uncomfortable, unacceptable idea to people who take their doctrine of evolution over-simply. But I think, it must be admitted to be true. Of the very greatest things in each sort of literature. the masterpiece is unprecedented, unique, never challenged or approached henceforth.''

—*Dr. I. A. Richards,*
Quoted by A.C. Bosanquet,
in his Comparative Religion

காட்டியாய் - மூல ஆதாரமாய் - மேல்வரிச்சட்டம் என்னுமாறு திகழ்வதாகவும், திருக்கோவையார் பெரிதும் சிறந்தோங்கி விளங்குகின்றது. கோவை நூல்களின் வரிசையில் மிகமிகப் பழமையும், பெருமையும் முதன்மையும் அருமைப்பாடும், தெய்விக நலச்சிறப்பும் பெற்றுப்பிறங்கி, ஈடும் எடுப்பும் அற்று வீறுற்று விளங்குவது, மணிவாசகப் பெருமான் அருளிய திருக்கோவையார் என்பதனை, அறிஞர்கள் அனைவரும் உளமுவந்து, இனிது ஏற்று உடன்பட்டுப் போற்றி மகிழ்வர். ஆதலின், திருவாசகம் திருக்கோவையார் என்னும் இவ்விரு பெருஞ் செந்தமிழ்த் தெய்விகத் திருமறைநூல்களையும், நாம் தக்கவாறு போற்றிப் பயின்று ஓதி மகிழ்ந்து உய்ய முயல்வோமாக!

தேனூறும் செஞ்சொற் றிருக்கோவைச் செய்யுள்கள்
நானூறும் நானூறு நன்மணிகள்! - வானேறும்
காமநலஞ் சான்ற கடவுண்மா ஞானநூல்
ஆமதன்சீர்க் குண்டோ அளவு? (1)

காதல் உணர்ச்சியினைக் கடவுள் உணர்வினொடு
தீதறச்சேர்த் துக்கோவை செய்தளித்து—ஓதுலக
மக்களெலாம் உய்யவைத்த மாணிக்க வாசகர்தாள்
எச்காலும் போற்றியும்வோம் யாம்! (2)

நல்ல தமிழர்! சிவநெறியர்!
நயந்து தொழில்கள் நனிவளர்த்தோர்!
செல்வர்! வள்ளல்! **கருமுத்துத்**
**தியாக ராசர்** நினைவாக,
எல்லை இலாச்சீர்த் திருக்கோவை
யாரும், திருவா சகமும்எனைச்
சொல்ல வைத்த, நல்லோர்க்கென்
தூய நன்றி பெரிதுரித்தே! (3)

ந. ரா. மு.

[இக்கட்டுரை, மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தின் ஆதரவில், 'கலைத்தந்தை' திரு. **கருமுத்து. தியாகராசச் செட்டியார்** அவர்களின் நினைவு அறக்கட்டளை அமைப்பின் சார்பில், அவர்தம் நினைவு விழா நாளில், மகாவித்துவான் திரு. **ச. தண்டபாணி தேசிகர்** அவர்கள் தலைமையில் நிகழ்த்திய சொற்பொழிவைத் தழுவியது (30—7—81). — ந. ரா. முருகவேள்]

# நம்மாழ்வாரும், மாணிக்கவாசகரும்

*முன்னுரை:*

வைணவம், சைவம் என்னும் இருபெரும் சமயங்களும் தமிழ்நாட்டில் இரண்டு கண்கள்போலச் சிறந்து விளங்கு வனவாகும். வைணவமும் சைவமும், மிக்க பழமையும் பெருமையும் வாய்ந்தனவாய், சங்க காலத்திற்கும் மிக முற்பட்டுத் தோன்றி, தொன்னெடுங் காலமாக நிலவி வரும் சிறப்புடையனவாகத் திகழ்கின்றன.

சிறிது ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற் பட்ட தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கண நூலிலேயே, ''மாயோன் மேய காடுறை உலகம்'' என்று. முல்லை நிலத்திற்கு உரிய தெய்வம் திருமால் என்பது. சிறப்பாக எடுத்துக் கூறப்பெற்றுள்ளது. அதனைத் தழுவிப் பிற்காலத்தில்,

''அங்கண் முல்லையின் தெய்வம்
என்று அரும்தமிழ் உரைக்கும்
செங்கண் மால்...''

என்று சேக்கிழார் பெருமானும், பொன்என மதித்துப் போற்றிப் பொதிந்துகொண்டு, போற்றிப் பொதிந்து கொண்டு வழிமொழிந்துள்ளார்.

''திருவுடை மன்னரைக் காணில்
திருமாலைக் கண்டேனே என்னும்''

என்று, நம்மாழ்வார் பாடுவதற்கு அடிப்படையாக,

''மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பில்
தாவா விழுப்புகழ் பூவைநிலை''

என்று தொல்காப்பியம், விதித்திருத்தலும் பிறவும், திருமால்நெறியின் தொன்மையினை வலியுறுத்தப் போதிய சான்றுகளாகும்.

**திருவள்ளுவர்:**

இவ்வாறே 'சமயக் கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறிப் பொருள் இது' என்று விளக்கிய திருவள்ளுவர், தாம் எந்தச் சமயத்தையும் வெளிப் படையாகக் கூறாத இயல்பினராயினும்,

> ''மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
> தாஅயது எல்லாம் ஒருங்கு''

என்னும் திருக்குறளில், 'மூவுலகும் ஈரடியால் முறை நிரம்பா வகைமுடியத் தாவிய சேவடியால்' அளந்த திருமாலின் திருவிக்கிரம அவதாரம் பற்றிக் குறிப்பிட் டுள்ளார். மேலும் அவர், திருமால் பரத்துவநிலையில் எழுந்தருளி விளங்கும் பரமபதத்தினை,

> ''தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்?
> தாமரைக் கண்ணான் உலகு''

என்னும் திருக்குறளில், 'தாமரைக் கண்ணான் உலகு' என்று விதந்து சுட்டி யுரைத்திருக்கின்றார். இன்னோ ரனைய பற்பல சான்றுகளால், திருமால் நெறியின் பழமையும் பெருமையும் இனிது விளங்கும், மருத்துவன் தாமோதரனார், இளங்கண்ணனார், கண்ணனார், கேசவனார், நல்அச்சுதனார் என்பன முதலாக வழங்கி வந்த சங்ககாலப் புலவர்களின் பெயர்களும், ஈண்டு எண்ணி இன்புறத் தக்கன.

---

* திருப்பதித் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில், தமிழ்த்துறையின் சார்பில் நிகழ்ந்த ''நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும்'' பற்றிய கருத்தரங்கத்திற்கு வழங்கப் பெற்ற ஆய்வுக்கட்டுரை (24-1-81).

—ந. ரா. மு.

**திருவேங்கடமும், சிலப்பதிகாரமும்:**

இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, சங்க காலத்தில் திருவேங்கடம் என்னும் இத்திருப்பதியில், பெருமாள் நின்ற திருக்கோலத்தில் விளங்கிக் காட்சிதரும் சிறப்பு, சிலப்பதிகாரத்தில் எழிலுற இனிது விளக்கப் பெற்றுள்ளது.

''வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை,
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
இருமருங்கு ஓங்கிய இடைநிலைத் தானத்து,
மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு,
நன்னிற மேகம் நின்றது போலப்,
பகையணங் காழியும், பால்வெண் சங்கமும்
தகைபெறும் தாமரைக் கையில் ஏந்தி,
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு,
பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றிய,
செங்கண் நெடியோன் நின்ற வண்ணம்''

என்று, திருவேங்கடத்தில் வேங்கடேசப் பெருமாள், அழகுற எழுந்தருளி வழங்கும் இனிய காட்சியினை, இளங்கோவடிகள் புகழ்ந்து போற்றித் துதித்திருக்கின்றார். இதனால் 2000 ஆண்டுகளுக்கும் முன்னரே, வைணவ சமயம் தமிழ்நாட்டில் தழைத்து ஓங்கியிருந்த தன்மையும், தொன்மையும் புலனாகின்றன.

**சைவ, வைணவ சமரசம்:**

முதலாழ்வார்களுள் ஒருவராகிய பேயாழ்வார், சிவ பெருமானும் திருமாலும் பிரிவறக் கலந்து பிணைந்து, இணைந்து, இத் திருவேங்கடமலையின்கண் ஒருருவாய்க் காட்சி தருதலை,

''தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்,
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்,—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து''

என்று பேயாழ்வார் அழகுறப் பாடியருளியிருக்கின்றார்.

''பொன்திகழும் மேனிப் புரிசடைஅம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்,- என்றும்
இருவர் அங்கத் தால்திரிவ ரேனும், ஒருவன்
ஒருவன்அங்கத்து என்றும் உளன்''

என்று பொய்கையாழ்வார் தாமும் பாடியிருத்தல் கருதி மகிழத்தக்கது. இதனால் பண்டைக்காலத்தில் தமிழக மக்களிடையில் பரவி நிலவியிருந்த சைவ-வைணவ சமரச மனப்பான்மை தெளிவுறத் தெரிகின்றது.

***சமயம் மக்களைப் பிரித்தல் கூடாது :***

ஆனால், இக்காலத்தில் அத்தகைய சமரசப் பொதுமை நோக்கம், போதிய அளவு நம்மிடையில் உள்ளதா? என்பது, ஐயமாகவே உள்ளது. ''நாம் ஒருவரை ஒருவர் வெறுப்பதற்குப் போதிய சமயங்களைப் பெற்றிருக்கின்றோம். ஆனால் ஒருவரையொருவர் விரும்புவதற்கு உரிய முறையில் போதிய சமயங்களை நாம் பெற்றிருக்கவில்லை''(''We have enough religion to hate one anothor but not enough to love one another'' -Jonathan Swift) என்னும் ஆங்கில அறிஞர் குறிப்பிடுகின்றார். சமயங்கள் தம் கொள்கைகளால் மக்களைப் பலவகைகளில் பிரித்துவிடாமல், அனைவரையும் ஒன்று சேர்த்து ஒற்றுமைப்படுத்த முயலுதல் வேண்டும என்று' அவர் விரும்புகின்றார். உலகெங்கணும் உள்ள நல்லறிஞர்கள் பலரும், இந்நாளில் இதனையே பெரிதும் வற்புறுத்தி வருகின்றனர். அத்தகையதொரு சிறந்த நல்ல விருப்பத்துடனும், குறிக்கோளுடனுமே, ''நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும்'' பற்றிய இக்கருத்தரங்கு நடைபெறு

கின்றது. இக்கருத்தரங்கை ஏற்பாடு செய்தவர்களுக்குச் சமய உலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

**நம்மாழ்வார் :**

நம்மாழ்வார், பாண்டிய நாட்டில், திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரபரணி நதிக்கரையில், திருக்குருகூர் என்னும் தலத்தில், காரியார் என்னும் வைணவப் பெருஞ் சான்றோருக்கும், உடைய நங்கையார் என்னும் அம்மையாருக்கும் மைந்தராகத் தோன்றியருளினார். ஆழ்வார்கள் அனைவருமே சிறப்புடையவர்களாயினும், அவர்களுள்ளும் மிகவும் சிறப்புடையவராகப் பெரிதும் போற்றப் பெறுபவர் நம்மாழ்வார். அனைவராலும் நம்முடைய ஆழ்வார் என்று உரிமை கொண்டாடிப் புகழ்ந்து போற்றப் பெறும் சிறப்பு அமைந்ததனால், அவருக்கு நம்மாழ்வார் என்னும் காரணச் சிறப்புப் பெயர் ஏற்பட்டது. ''நம்பெருமாள்-நம்மாழ்வார்-நஞ்சீயர்-நம் பிள்ளை என்பர், அவரவர்தம் ஏற்றத்தால்'' எனவரும் உபதேச ரத்தினமாலைச் செய்யுள், நம்மாழ்வாரின் ஒப்புயர்வற்ற பெருமாட்சிமையினை இனிது உணர்த்து கின்றது. திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு நூல்களை, நம்மாழ்வார் அருளிச் செய்துள்ளார்.

**மாணிக்கவாசகர் :**

பாண்டிய நாட்டில், மதுரைக்கு அருகில் உள்ள திருவாதவூர் என்னும் தலத்தில், சம்புபாதாசிரியர் என்பவருக்கும், சிவஞானவதி என்னும் அம்மையாருக்கும் மைந்தராகத் தோன்றியவர், மாணிக்கவாசகர். அவர் இளமையிலேயே கல்வி கேள்விகளில் சிறந்து, அரிமர்த்தனன் என்னும் பாண்டிய மன்னனின் முதலமைச்சராக விளங்கினார். திருவாசகம், திருக்கோவையார் என்னும் இருபெரு நூல்களை இயற்றியருளினார்.

**ஒப்புமைகள் :**

நம்மாழ்வார், மாணிக்கவாசகர் என்னும் இவ்விரு பெருஞ் சான்றோர்களும், வேறு வேறு இடத்தில், வேறு வேறு சமயத்தைச் சேர்ந்தவர்களாகத் தோன்றியிருப்பினும், ''சான்றோர் சான்றோர் பாலர் ஆவர்'' என்று புறநானூறு பாடுவதுபோல், தம்முள் பலவகைகளில் ஒப்புமைத் தன்மைகள் உடையவராக திகழ்கின்றனர். அவ்வொப்புமைத் தன்மைகளுள் ஒரு சிலவற்றை மட்டும் ஈண்டுக் காண்போம்.

**(1) ஆன்மீக வளர்ச்சி :**

''ஆன்மீக வளர்ச்சியின் பலவேறு படிநிலைகளையும், உணர்ச்சித் திறன்களையும் திருவாசகம் அழகிய பாடல்களினால் விளக்கிக் காட்டுகின்றது'' (Thiruvasagam depicts in beautiful hymns the varlous stages in the evolution of the soul) என்று பேரறிஞர் ஜி. யு. போப் (Dr. G. U. Pope) முதலிய பேரறிஞர்கள் கூறுவர். அம்முறையில் நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழியும் கூட, ஆன்மீக வளர்ச்சியின் பலவேறு படிநிலைகளையும், உணர்ச்சித் திறன்களையும், அழகிய இனிய பாடல்களினால் அருமையான சொல்லோவியங்களாக அமைத்து விளக்கிக் காட்டுகின்றது. ''ஆசாரிய இருதயம்'' என்னும் அரும்பெரும் வைணவத் திறனாய்வு நூல், இதனை அழகுற ஆராய்ந்து விரிவாக விளக்குகின்றது.

**(2) நூல்களின் சிறப்பு :**

நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழியையும், மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகம் திருக்கோவையார் என்பனவற்றையும், பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் பெரிதும் போற்றிப் புகழ்ந்து வியந்து துதித்துள்ளனர்.

''ஆயிரம் மாமறைக்கும் அலங்காரம்; அருந் தமிழ்க்குப்
பாயிரம்; நாற்கவிக்குப் படிச்சந்தம்;'' பனுவற்கு எல்லாம்
தாய்; இரு நாற்றிசைக்கும் தனித் தீபம்; தண்ணம் குருகூர்ச்
சேய்; இரு மாமரபும் செவ்வியான், செய்த செய்யுட்களே''

என்று நம்மாழ்வாரின் நூல்களைப் பெரியோர்கள் புகழ்ந்து போற்றியுள்ளனர். இவ்வாறே மாணிக்க வாசகரின் திருவாசகம், திருச்சிற்றம்பலக்கோவையார் என்னும் நூல்களையும், பண்டைய பெரியோர்கள் பலரும் பாராட்டிப் போற்றியுள்ளனர்.

''ஆரணம்காண் என்பர் அந்தணர்; யோகியர் ஆகமத்தின்
காரணம்காண் என்பர்; காமுகர் காம நன்னூலது என்பர்;
ஏரணம்காண் என்பர் எண்ணர்; எழுத்து என்பர் இன்புலவோர்;
சீரணங்கு ஆயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே''

என்னும் ஒரு பழைய சிறந்த பாடல், மணிவாசகரின் திருக்கோவையார் பற்றிப் பெரிதும் புகழ்ந்து போற்று கின்றது. இத்தகைய பல பாடல்களால், நம்மாழ்வாரின் நூல்களும், மணிவாசகரின் நூல்களும் எத்துணைச் சிறப்பு வாய்ந்தவை என்பதை யாவரும் இனிதுணரலாம்.

**(3) அர்த்த பஞ்சகம் :**

நம்வாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழியில் ஐந்துவகையான சிறந்த பொருள்கள் விளக்கப்பட் டுள்ளன என்று, வைணவப் பெருஞ்சான்றோர்கள் கூறுவர். அந்த ஐந்துபொருள்களும் ''அர்த்த பஞ்சகம்''

எனப்படும். அவையாவன: இறைவனது தன்மை, உயிரின் தன்மை, உயிர்கள் இறைவனின் அருளைப்பெறும்நெறியின் தன்மை, உயிர்கள் அருளைப் பெறவொட்டாமல் செய்யும் தடையின் தன்மை, அருளால் எய்தும் பேரின்பத்தின் தன்மை என்னும் ஐந்து பொருள்களை, நம்மாழ்வார் தம்முடைய திருவாய்மொழியின் ஆயிரம் பாடல்களால் விளக்கி அருள்கின்றார்.

''மிக்க இறைநிலையும், மெய்யாம் உயிர்நிலையும்,
தக்க நெறியும், தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும், வாழ்வினையும், ஓதும் குருகையர்
கோன்
யாழின் இசை வேதத் தியல்''

என்று, படடா அருளிச் செய்த தனியன் என்னும் செய்யுளால், திருவாய்மொழி விளக்குகின்ற அர்த்த பஞ்சகம் என்னும் ஐம்பொருள்களையும் நாம் ஐயமற உணரலாம்.

மணிவாசகரின் நூல்களிலும்கூட, இறைவனின் நிலை-உயிரின் இயல்பு-தளையாகிய பாசங்களின் தன்மை-அருள் நலம்-பேரின்பம் என்னும் இந்த ஐந்துவகைப் பொருள்கள், ஆங்காங்கே அழகுற விளக்கப் பெற்றிருக்கக் காண்கின்றோம். இவ்வாறே மணிவசசகர் பாடலகளில் விளக்கப்பெறும் இறை உயிர் தளை (பதி பசு பாசம்) எனப்படும் மூன்று பொருள்களும், நம்மாழ்வாரின் பாடல்களில் சித்து அசித்து-ஈசுவரன் என்று வழங்கப் பெறும்.

## (4) தத்துவக் கொள்கைகள்

நம்மாழ்வாரின் பாடல்களில் வைணவ சமயத்திற் குரிய தத்துவக் கொள்கைகள் பலவும் பெரிதும் நிறைந் திருக்கும். நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழி முதலிய திவ்வியப்பிரபந்தப்பாடல்களை, அடிப்படையாகக் கொண்டே வைணவ சமய தத்துவக்கொள்கை

கள் அனைத்தும், தொகுத்து வடித்துத்தரப்பெற்றுள்ளன. வேதாந்த தேசிகர் கூறுவதுபோல், தெளியாத மறை நிலங்கள் தெளிவதற்கு நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழி முதலிய திவ்வியப்பிரபந்தப் பாடல்கள், பெரிதும் துணைபுரிகின்றன.

**திருவாய்மொழி:**

எம்பெருமானார் என்னும் இராமாநுசர், வைணவ சமயத்திற்குரிய தத்துவக் கொள்கையினை, விசிஷ்டாத் வைதம் என்னும் பெயரில் தொகுத்து விளக்கியருளினார். விசிஷ்டாத்வைதம் என்னும் மிகப்பெரிய தத்துவ மாளிகைக்கு, அவர் அடிப்படையாக எடுத்து அமைத்துக் கொண்டது, நம்மாழ்வார் அருளிய,

''உடல்மிசை உயிர் எனக்
கரந்து எங்கும் பரந்துளன்''

என்னும், திருவாய்மொழிப் பாடலின் ஒரு வரியேயாகும். இந்த ஒரு வரியை அடிப்படையும் ஆதாரமுமாகக் கொண்டே, விசிஷ்டாத்வைதம் என்னும் பெருமாளிகை இராமாநுசரால் எழுப்பப்பெற்றது எனின், நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியின் பெருமையை நாம் சிந்தித்து உணரலாம்.

**சிவஞானபோதம்:**

இவ்வாறே, மணிவாசகர் அருளிய திருவாசகமும் சைவசித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கைகள் பல வற்றிற்கு அடிப்படையும் ஆதாரமுமாக அமைந்தது என்பது, சிந்தித்து உணர்ந்து இன்புறுதற்குரியது. சிவஞான போதம் என்னும் சைவசித்தாந்த சாத்திரத்தில்,

''ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்,
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு,
அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே!''

எனவரும் எட்டாம் சூத்திரம், ''இறைவனே குருவாக வருவான்; குருவும் இறைவனும் வேறல்லர்; இறைவனும் குருவும் ஒன்றே'' என்று கூறுவதற்கு, மணிவாசகர் அருளிய திருவாசகப் பாடல்களே, சிறந்த அடிப்படையும் ஆதாரமும் ஆகும்! இவ்வாறு தத்தம் சமய தத்துவக் கொள்கைகளை விளக்கும் திறனிலும், நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் தம்முள் ஒப்புமை பெரிதும் உடையவ ராகத் திகழ்கின்றனர்.

**பக்தி, பிரபத்தி:**

நம்மாழ்வார் தம்முடைய பாடல்களிலும் நூல்களி லும், இருவகை நெறிகளை உலகுக்கு உணர்த்தியருளுகின் றார். அவையாவன: ஒன்று பக்தி; மற்றொன்று பிரபத்தி. இவற்றுள் பக்தியானது, இறைவனிடத்து உயிர்கள் செய்கின்ற அன்பின் மிகுதி. பிரபத்தியாவது' இறைவன்பால் சரணாகதி அல்லது அடைக்கலம் புகுதல். நம்மாழ்வாரின் பாடல்களில், இவ்விருவகை நெறிகளையும் பரக்கக் காணலாம். இவ்வாறே மணிவாசகப்பெருமானின் பாடல்களிலும் பக்திநெறி, பிரபத்திநெறி ஆகிய இரண்டும், ஆங்காங்கு வற்புறுத்தப் பெற்றிருக்கக் காண் கின்றோம்.

''மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து, உன்விரையாம் கழற்குஎன்
கைதான் தலைவைத்து, கண்ணீர் ததும்பி, வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்து, உன்னைப் போற்றி சயசய '! போற்றி என்னும்
கைதான் நெகிழவிடேன்; உடையாய், என்னைக் கண்டுகொள்ளேய'

எனவரும் திருவாசகப் பாடல் போல்வன, பக்திநெறினை உணர்த்துகின்றன.

''மாவடு வகிரன்ன கண்ணி பங்கா! நின் மலரடிக்கே
கூவிடுவாய்; கும்பிக்கே இடுவாய்; நின்குறிப்பு அறி
யேன்;
பாவிடை ஆடு குழல்போல், கரந்து பரந்தது உள்ளம்;
ஆகெடுவேன் உடையாய், அடியேன் உன்
அடைக்கலமே''

என்பன போன்றுவரும் அடைக்கலப்பத்துப் பாடல்கள் பலவும், நம்மாழ்வார் விளக்கும் பிரபத்தி நெறியை உணர்த்துவதால் காணலாம்.

## 6. குருட்டா மிலைத்தல்:

நம்மாழ்வார், மாணிக்கவாசகர் என்னும் நம் இரு பெறும் தமிழகச் சான்றோர்களின் உள்ளமும் உணர்வும், நோக்கமும் குறிக்கோளும், சொல்லும் பொருளும் ஆகியன எல்லாம், ஒன்றினொன்று முரணாமல், பெரிதும் ஒத்தியைந்து காணப்படுகின்றன. ''பெரிய உள்ளங்கள் ஒத்த நிலையிலேயே நினைக்கும்'' (Great minds think alike) என்று அறிஞர்கள் கூறுவர். அறிவியல் அறிஞர்களின் கருத்துக்களும், கொள்கைகளும், கண்டுபிடிப்புக்களும் பெரும்பாலும் ஒன்றொடொன்று முரண்பட்டு நிற்கும். ஆனால் அருளாளர்களின் கருத்துக்களும், கொள்கைகளும், என்றும் எங்கும் மாறுபடுவதில்லை; அவைகள் எந்தநாட்டிலும் எந்தக் காலத்திலும் ஒரு தன்மையனவாகச் சிறிதும் முரண்படாமல் ஒன்றாகவே விளங்கும். இத்தகைய பற்பல ஒப்புமைகளை நம்மாழ்வார், மணிவாசகர் பாடல்களில் நாம் காண்கின்றோம்.

''கண் தெரியும் பிற பசுக்கள் எழுப்பும் குரல் ஒலியைக் கேட்டு, கண் தெரியாத ஒரு குருட்டுப் பசுவும்கூட, தனது குரல் ஒலியை எழுப்புவது போல, உன் அருள்பெற்ற அடியவர்கள் உன்னைப் பாடித் துதித்தலைப் பார்த்து, உன்அருள் பெறாத யானும் ஏதோ சில பாடல்களைப் பாடி, உன்னைத் துதிக்க முயல்கின்றேன்'' என்னும் கருத்து அமைய,

''எப்படி ஊர்ஆ மிலைக்கக் குருட்டா மிலைக்கும்
என்னும்
அப்படி யானும் சொன்னேன், அடியேன் மற்று யாது
என்பனே''

என்று நம்மாழ்வார் பாடுகின்றார். அப்பாடலைப் போலவே,

''ஊர்ஆ மிலைக்கக் குருட்டா மிலைத்தாங்கு, உன்
தாளிணை அன்புக்கு
ஆராய், அடியேன் அயலே மயல்கொண்டு
அழுகேனே''

எனவரும் மாணிக்கவாசகர் பாடலும் அமைந்திருத்தல், ஒப்புநோக்கி உணரற்பாலது. இவ்வாறே,

''நின்றஒன்றை உணர்ந்தேனுக்கு, அதனுள் நேர்மை
அதுஇது என்று,
ஒன்றும் ஒருவர்க்கு உணரலாகா: உணர்துமேனும்
காண்பரிது:
**சென்று சென்று பரம்பரையாய் யாதும் இன்றித்
தேய்ந்தற்று,**
நன்று தீதுஎன்று அறிவரிதாய், நன்றாய் ஞானம்
கடந்ததே''
—திருவாய்மொழி, 2939

எனவரும் நம்மாழ்வார் பாடலும்,

''இன்றுஎனக்கு அருளி இருள்கடிந்து உள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று,
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்;
நீஅலாற் பிறிதுமற்று இன்மை;
**சென்றுசென்று அணுவாய்த் தேய்ந்துதேய்ந்து,**
ஒன்றாம திருப்பெருந் துறைஉறை சிவனே!
ஒன்றும்நீ அல்லை! அன்றிஒன்று இல்லை!
யார்உன்னை அறியகிற் பாரே?''
—திருவாசகம், 392

எனவரும் மணிவாசகர் பாடலும், கருத்தொருமித்துக் கவின்மிக்குத் திகழ்தல் கருதியுணரற்பாலது. இங்ஙனம்

மேலும் பலப்பல ஒப்புமைச் சொற்கள், சொற்றொடர்கள், கருத்தொருமைப்பாடுகள், நம்மாழ்வார் மணிவாசகர் ஆகிய இருவரின் பாடல்களிலும், நாம் மிகுதியாகக் கண்டு நனிமகிழலாம்.

## நாயக நாயகி பாவம் :

நம்மாழ்வார்க்கும், மணிவாசகர்க்கும் இடையே காணப்படும பலவகை ஒப்புமைத் தன்மைகளுள், மிகவும் தலையாயது—பெரிதும் சிறந்தது, இவ்விருவரும் இறைவனைத் தலைவனாகவும, தமமைத் தலைவியாகவும், கருதி உணர்ந்து அனுபவித்து இன்புற்றிருத்தலேயாகும். ஞானத்திலும், பக்தியிலும் சிறந்த இவ்விரு பெருமக்களின் பாடல்களும், இறைவன்மாட்டு அடியவர்கள் கொள்ளும் மேலாகிய மிகச்சிறந்த பேரன்பின் திறனை உணர்த்தும் ''நாயகநாயகி பாவம்'' (Bridal Mysticism) கொண்டு விளங்குகின்றன. அறிவின் முதிர்ந்த நிலை ஞானமாகின்றது, அந்த ஞானத்தின் முதிர்ந்த நிலை, அன்பின் முதிர்ச்சி நிலையாகிய பிரேமம் ஆகின்றது. பிரேமம் என்னும் பேரன்புநிலை தலைப்படுங்கால், பக்தர்கள் பெண்மைநிலே அடைகின்றனர். இறைவனை நாயகனாகவும், தங்களை நாயகியாகவும், அவர்கள் கொள்ளுகின்றனர். ''இறைவனின் உறவில் உயிரானது எப்போதும் பெரும்பாலும் பெண்மைநிலை உடையதாகவும், செயலிழந்ததாகவுமே திகழ்கின்றது'' என்று 'நித்தியத் தத்துவம' (Perennial Philosophy) என்னும் நூலில், ஆல்டஸ் அக்சிலி (Aldous Huxley) என்னும் அறிவியற் பேராசிரியர் கூறுகின்றார்.*

---

*''Throughout the literatures of the world, the love of man for his Ishta Devata is likened to the love of a woman towards his lover and the bliss of communication is likened to the joy of physical union. The Biblical 'Song of Songs', the saying of Jesus Christ likening god to the bridegroom and

அதற்கு ஏற்ப, இறைவனின் உறவில் ஈடுபட்டுத் திளைக்கும் நம்மாழ்வாரும், மணிவாசகரும் பெண்மை நிலை அடைந்து, ஒரு தலைவியின் உள்ளமும் உணர்வும் எய்தி, இறைவனைத் தமது நாயகனாவும், ஆருயிர்த் தலைவனாகவும், கொண்டு, அவன்பாற் கொள்ளும் காதல் உணர்வில் தம்மை மறந்து, தம்மை இழந்து, பரவசமுற்று இன்பத்தில் ஆழ்ந்து திளைக்கின்றனர். ஞானநிலையில் பாடும் பாடல்களைத் தம் பேச்சாகவும், பிரேமம் என்னும் பேரன்பு முதிர்ந்த நிலையில் பாடும் பாடல்களைப் பெண்பேச்சாகவும், இருவரும் பாடு கின்றனர்.

திருவாய்மொழியில் வரும் நம்மாழ்வாரின் பாடல்கள் தாய்கூற்று, தோழிகூற்று, தலைவிகூற்று என்று மூவகைப் படும் பெண் பேச்சாக அமைந்துள்ளன. அதனாலேயே ''ஆசாரிய இருதயம்'' என்னும் அரும்பெரும் வைணவத் திறனாய்வு நூல்,

''ஞானத்தில் தம்பேச்சு
பிரேமத்தில் பெண்பேச்சு''

என்று அழகுற ஆராய்ந்து அறுதியிட்டு உரைக்கின்றது.

## 8. பெண் பேச்சு

இவ்வுண்மையை வலியுறுத்தும் வகையில் திருவாச கத்தில் முதல் நான்கு அகவல்கள், மற்றும் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம் என்பன, மணிவாசகரின் ஞான நிலையில் தன்பேச்சாக அமைந்துள்ளன. ஆனால்

---

the souls to virgins waiting for their spouse. The recorded experiences of mediaeval christian saints like St. Theresa and St Gertrude who recounted the caresses bestowed upon them by Christ, the assertion of St. Catherine that she was betrothed to Christ and was given a ring by him are all analogous". —Dr. C. P. Ramaswami Aiyer.
*Phase of Religion and culture, P. 39.*

அவற்றை அடுத்துவரும் திருவெம்பாவை, திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம் திருச்சாழல் திருப்பூவல்லி திருவுந்தியார் திருத்தோள்நோக்கம் திருப்பொன்னூசல் அன்னைப்பத்து, குயிற்பத்து என்பன, பிரேமம் முதிர்ந்த பெண்மைநிலைப் பேச்சாக அமைந்திருக்கக் காண்கின்றோம்.* நம்மாழ்வார்க்கும் மணிவாசகர்க்கும் இடையே எத்தகைய ஒப்புமைத் தன்மைகள் காணப்படுகின்றன என்பதற்கு, இப்பாடல்கள் சான்று பகரும்.

## 9. காதலின் ஏழுவகை நிலைகள்

ஒரு பெண்ணின் உடல் வளர்ச்சி, உள்ள வளர்ச்சிகளைக் கருதி, அவளுக்குப் பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம்பெண் என்று ஏழு வகையான பருவங்கள், தமிழ் இலக்கியங்களில் கூறப்பெறும். அதுபோல, இறைவன்பாற் கொள்ளும் காதலன்பின் மிகுதியால், பக்தர்கள் எய்தும் பெண்மை நிலையும் ஏழுவகையாகக் கூறப்பெறும். அவைகளாவன:

1. அபிலாஷை
2. சிந்தனை
3. அனுஸ்மிருதி
4. இச்சை
5. ருசி
6. பரபக்தி
7. பரமபக்தி

---

*"As a rule, the particular qualities associated with bhakti, love and devotion, mercy and tenderness are to be found more in women than in men. As bhakti emphasizes humility, obedience, readiness to serve, compassion and gentle love, As the devotee longs to surrender himself, renounce self-will and experience passivity' it is said to be more feminine in character. women expect, suffer, hope and receive. They long

பெண்மையானது பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம் பெண் என்னும் எழு வகைப் பருவங்களை உடையதாதல் போல், இறைவன் பால் அடியவர்கள் கொள்ளும் அன்பின் பெருக்கமாகிய பக்தியும், மேற்குறித்த ஏழு வகையான படிநிலைகளை உடையதாகும் என்று, 'ஆசாரிய இருதயம்' என்னும் வைணவப்பெருநூல் குறிப்பிடுகின்றது. முதன் முதலில் கண்ட அளவிலேயே உண்டாகும் இயற்கையான அன்பு, **அபிலாஷை,** அங்ஙனம கண்ட ஒருவரை மீண்டும் நினைவு கூர்தல் **சிந்தனை.** அந்நினைவு இடையறாது தொடர்ந்து மேலும் மேலும் பெருகி வளர்ந்து, அவரை மீண்டும் மீண் டும் நினைவு கூரப்பெறுதல் **அனுஸ்மிருதி.** அந்நினைவின் மிகுதியால் அவரை எங்ஙனமேனும் கூடிக்கலந்து மகிழ்ந்து இன்புறுதல் வேண்டும் என்று பெருகி எழும் விருப்பம் **இச்சை.** அவ்விருப்பம் வேறு எதனாலும் மாற்றி நீக்க இயலாதபடி மேன்மேல் பெருகி முதிர்ந்து நிற்கும் தன்மை **ருசி.** அத்தகையவர் ஒருவரைக் கூடுதலே இன்பமாகவும், பிரிதலே துன்பமாகவும் நிகழும் உணர்வு **பரபக்தி.** அன் பிற்குரியவரைப் பிரிந்த அளவில், அல்லது பிரிய நேருமோ என்னும் உணர்வு நிகழ்ந்த அளவிலேயே, மூர்ச்சையுற்று மயங்கி உயிர் துறக்கும் பேரன்பு நிலை **பரமபக்தி.** இறைவனை அடைவதற்கு ஒரு வகையில் இத்தகைய எழு வகை ஆன்மீகப்படிநிலை வளர்ச்சிகளைச் செயின்ட் அகஸ் டின் என்னும் கிறித்தவச் சான்றோர் குறிப்பிட்டு விளக்கி யிருப்பதாகப் பேரறிஞர் ஜி. யூ. போப் அவர்கள் கூறுதல்,

---

for Compassion, mercy, peace. Femininity is in all beings. when they are most truly themselves. women give everything, claim nothing; they want to love. Radha typifies the loving soul. In relation to god. Bhakthas are more like women."

—Dr. S. Radhakrishnan,
*Introductory Essay, Tha Bhagavadgita, P. 61.*

இங்கு நாம் இயைபொப்புமையுடைமை பற்றிக் கருதி யுணர்ந்து மகிழ்தற்கு உரியது.*

### (10) பரமபக்தி,

இப்பரமபக்தியே, அன்பு அல்லது பக்தியின் முடிவான பெருநிலைஎனப்போற்றப்படும். பரமபக்திஎன்னும்சிறந்த இந்நிலையை விளக்குவதற்கு நீரினை விட்டுச் சிறிது பிரிய நேர்ந்தாலும், துடிதுடித்து வருந்தி உயிர் துறக்கும் மீன், உவமையாக எடுத்துக் காட்டப்பெறும். நீரிற் பிரிந்ததும் துடிதுடித்து உயிர் துறக்கும் மீனின் நிலை, பிரேமம் என்னும் பேரன்பின் முதிர்ச்சி நிலைக்கு, உவமையாக எடுத்துக் காட்டப்பெறுதல், மிகவும் பொருத்தம் வாய்ந்த தொன்றாகும். நம்மாழ்வார்க்கு வாய்த்திருந்த இப்பரம பக்தி நிலை, மணிவாசகப் பெருமானுக்கும் வாய்த் திருந்தமை,

''பெருநீர் அறச்சிறு மீன்துவண் டாங்கு,
நினைப்பிரிந்த
வெருநீர்மையேனை விடுதிகண்டாய்;
வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுள் மலைச்சிறு தோணி வடிவின்,
வெள்ளைக்
குருநீர் மதிபொதியும் சடை வானக்கொழுமணியே''

என்று திருவாசகம் நீத்தல் விண்ணப்பத்தில் வரும் செய்யு ளால் செவ்விதிற் புலனாகும்.

### (11) நம்மாழ்வாரின் திருவிருத்தமும், மணிவாசகரின் திருக்கோவையாரும் :

நம்மாழ்வாரும் மணிவாசகரும், நம் தமிழகத்தில் தோன்றி வாழ்ந்த தலைசிறந்த ஞானப்பெருஞ் செல்வர்

*"St. Augustine, deeply imbued with Alexandrian thought, in his treatise 'De Doctrina Christiana', gives *Seven Steps* by which the Soul Comes to God. The first of these is *'the fear of God'*. The second is 'the reverant study of the Divine revelation'. The third is

களாவர். இன்று தோன்றி நாளை மறைந்தொழியும் நம்மைப் போன்றில்லாமல், எத்தணையோ பல நூற்றாண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய அவர்கள், இன்றளவும் மக்களிடையில், அளவில்லாத அழியாத செல்வாக்குப் பெற்று விளங்குகின்றனர். இனியும் நம் தமிழ் உள்ளளவும், என்றென்றும், அவர்களின் செல்வாக்கும், சிறந்த புகழும் நின்று நிலைபெற்றிருக்கும். இத்தகைய இவர்கள் இருவரும் முறையே அருளிச் செய்துள்ள திருவிருத்தம். திருக்கோவையார் என்பன,

''ஐந்திணை உறுப்பின் நாற்பொருள் பயக்கும்
காமம் சான்ற ஞானப் பனுவல்கள்''

ஆகும். இவ்விரு பெரும் சிறந்த நூல்களிலும், அகப்பொருள் துறை அமைந்த பல பாடல்களில், ஒத்த கருத்துக்கள் பல காணப்படுகின்றன. அவைகளுள் ஓருசிலவற்றை மட்டும் ஈண்டுக் காண்போம்.

*(1)* 'தலைவி கடலைக் நோக்கித் தேர்வழி தூரல்' என்று வேண்டுவதாக வருகின்ற,

''இருள்விரிந் தால்அன்ன மாநீர்த் திரைகொண்டு வாழியரோ!
இருள்பிரிந்தார் அன்பர் தேர்வழி தூரல்! அரவணைமேல்
இருள்விரி நீலக் கருஞாயிறு சுடர் கால்வதுபோல்
இருள்விரி சோதிப் பெருமான் உறையும் எறிகடலே!'' **(17)**

என்னும் திருவிருத்தச் செய்யுளும்,

---

'love of God and of our fellow-men'. The fourth is 'steadfast self-discipline'. The fifth is 'purgatioanimae'. The sixth is 'purgatio oculi cordis'. The seventh is that in which 'talis filius adcendit ad sapientiam'......''

*—Rev. Dr. G. U. Pope, M.A.,D.D.*

''உள்ளும் உருகி உரோமம் சிலிர்ப்ப,
உடையவன் ஆட்
கொள்ளும் அவரில் ஓர் கூட்டம் தந்தான்;
குனிக்கும் புலியூர்
விள்ளும் பரிசு சென்றார், வியன் தேர்வழி
தூரல் கண்டாய்!
புள்ளும் திரையும் பொரச், சங்கம் ஆர்க்கும்
பொருகடலே!''

என வரூஉம் திருக்கோவையார் பாடலும், எத்துணைக் கருத்தொப்புமை உடையனவாகத் திகழ்கின்றன!

(2) தலைவி இழைத்த கூடல் அழிவிற்குப் பாங்கி இரங்கித் தலைவனுக்குக் கூறுவதாக வருகின்ற,

''சிதைக்கின்றது ஆழி என்று, ஆழியைச் சீறித்
தன் சீறடியால்
உதைக்கின்ற நாயகம் தன்னொடு, மாலே!
உனது தண்தார்
ததைக்கின்ற தண்ணந் துழாய் அணிவான்,
அதுவே மனமாய்ப்
பதைக்கின்ற மாதின் திறத்து: அறியேன்
செயற் பாலதுவே!

என்னும் திருவிருத்தச் செய்யுளும்,

''ஆழி திருத்தும் புலியூர் உடையான் அருளின்
அளித்து,
ஆழி திருத்தும் மணற்குன்றின் நீத்து
அகன்றார் வருகென்று,
ஆழி திருத்திச், சுழிக்கணக்கு ஓதி நையாமல், ஐய!
வாழி! திருத்தித் தரக்கிற்றியோ? உள்ளம்
வள்ளலையே!''

எனவரும் திருக்கோவையார் செய்யுளும், தம்முள் பெரிதும் ஒத்துநிற்றல் கருதியுணர்ந்து மகிழ்தற்குரியது.

(3) தலைவன் தலைவியின் அழகினை வியந்துநயந்து, நலம் புனைந்து புகழ்ந்து பாராட்டிக் கூறுவதாக வருகின்ற.

''வண்டுகளோ! வம்மின்! நீர்ப்பூ நிலப்பூ
மரத்திலொண்பூ
உண்டு களித்துழல் வீர்க்கொன் றுரைக்கியம்;
ஏனமொன்றாய்
மண்துக ளாடி வைகுந்தம் அன்னாள்குழல்
வாய்விரைபோல்
விண்டு, கள் வாரும், மலருள வோநும்
வியலிடத்தே?''

என்னும் திருவிருத்தச் செய்யுளும்,

''கூம்பலங் கைத்தலத்தன்பர்என் னூடுரு கக்குனிக்கும்
பாம்பலங் காரப் பரன், தில்லை யம்பலம்
பாடலரின்
தேம்பலஞ் சிற்றிடை ஈங்கிவள் தீங்கனி
வாய்கமழும்
ஆம்பலம் போதுள வோ? அளி காள்! நும்
அகன்பணையே!

எனவரும் திருக்கோவையார் செய்யுளும், சொற்பொருட் சுவை நலங்களால் மிகப்பெரிதும ஒத்துத் திகழ்தல் காணலாம்.

(4) தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர் மறுத்தல் என்னும் துறையில் அமைந்து விளங்குகின்ற,

''புலக் குண்டலப் புண்டரீகத்த போர்க் கெண்டை
வல்லி ஒன்றால்
விலக்குண் டுலாகின்று, வேல்விழிக் கின்றன,
கண்ணன் கையால்

மலக்குண் டமுதம் சுரந்த மறிபடல் போன்று; அவற்றால்
கலக்குண்ட நான்று கண்டார், எம்மை யாரும் கழறலரே!''

எனவரும் திருவிருத்தச் செய்யுளுக்கும்,

''சேணிற் பொலிசெம்பொன் மாளிகைத் தில்லை சிற்றம்பலத்து
மாணிக்கக் கூத்தன் வடவான் கயிலை மயிலை, மன்னும்
பூணிற் பொலி கொங்கை ஆவியை, ஓவியப் பொற்கொழுந்தைக்
காணிற் கழறலை, கண்டிலை மென்தோட் கரும்பினையே!''

எனவரும் திருக்கோவையார் பாடலுக்குமிடையே உள்ள கருத்தொப்புமை ஆய்ந்தறிந்து இன்புறற்பாலது.

**முடிவுரை :**

இங்ஙனம் நம்மாழ்வார்க்கும், மாணிக்கவாசகர்க்கும் இடையேஉள்ள எந்தனையோ பலப்பல பொதுமை ஒப்புமைத் தன்மைகளை ஆராய்ந்து உணர்தல், அறிஞர்களுக்கெல்லாம் ஆராப் பெருவிருந்தாகும். இத்தகைய ஒப்புநோக்கு ஆய்வு (Comparative Study) செய்வதனால், அறிவு வளரும், அன்பு பெருகும்; சமய சமரச நோக்கும், சமாதான சகவாழ்க்கை உணர்வும் தழைக்கும்; சமயங்களின் பூசலும் பிணக்கும் நீங்கும்; மக்கள் எல்லோரும் வேற்றுமைகளை மறந்து, அன்பினால் இன்புற்று ஒற்றுமைப்பட்டு மகிழ்ந்து வாழ்வர்.

— ந.ரா. முருகவேள்

## மாணவர் குழாம் சிறப்புறுப்பினர்கள்

'சிவநெறிச் செல்வர்'
புலவர் திரு. எஸ். ஆர். தேமொழியார்

'திருவருட்பாச் செல்வர்'
புலவர் மா. சா. காமாட்சிநாதன்

புலவர் ந. ஏ. இராமலிங்கம்,
B Com., B. Litt., M.A.,

'சித்தமருத்துவச் செல்வர்', 'புலவர்'
டாக்டர் மு. ந. மாசிலாமணி,
R.I M P , B. Litt., M.A.

புலவர் திரு. கேசவனார், B.Litt., M.A.

புலவர் திரு. ஆர். இராசு, B.Litt., M. A.

திரு. ந. அருளரசு, M.Com.

திரு. ந. ஒளியரசு, B.A., B.Com.

திரு. எம். இராமலிங்கம்,
M.A., M.Ed., M. Phil.,



## எங்கள் ஆசிரியர்!



ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள் அவர்கள், அருட்டிரு மறைமலையடிகளார் மாணவர். 'செந்தமிழ்த்தென்றல்' திரு. வி. கலியாண சுந்தரனார், நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், 'சைவப் பெரியார்' ச. சச்சிதானந்தம் பிள்ளை, அருட்டிரு அழகரடிகள், முதலிய எத்தனையோ பல சான்றோர்கள்பால் நெருங்கிப் பழகும் பேறு பெற்றவர்.

மறைமலை அடிகளார் மாட்சி, தமிழ் நாட்டு மில்ட்டன், சங்க இலக்கியமாண்பு, தருக்கஇயல் விளக்கம், இலக்கணத்தில் எழிற் கற்பனைகள், தெய்வத் திருவுருவங்கள், சிவஞானபோதத் தெளிபொருள் விளக்கவுரை, சைவசித்தாந்தம் முதலிய பல அரிய ஆராய்ச்சி நூல்களும், நூற்றுக் கணக்கான சிறந்த ஆய்வுக் கட்டுரைகளும் இவரால் எழுதப் பெற்றுள்ளன.

சமய நிறுவனங்கள் பல இவரைச் சிறப்பித்து அவ்வப்போது பல பட்டங்கள் வழங்கியுள்ளன. 'செந்தமிழ்ச் சைவமணி' மதுரை ஆதீனம் (1958)—'சித்தாந்தப் புலவர் மணி' தருமை ஆதீனம் (1964) — 'ஞானத்தமிழாகரர்' குன்றக்குடி ஆதீனம் (1971) — 'புலவர்ஏறு' சென்னைச் சேக்கிழார் கழகம் (1974) — செந்தமிழ் வேந்தர்'

(viii-பக்கம் பார்க்க)